24th August 1961]

DEPUTY SPEAKER: The question is—

"That the Madras Tenants and Ryots Protection (Amendment) Bill, 1961 be passed".

The motion was put and carried and the Bill was passed.

## (5) THE MADRAS CULTIVATING TENANTS PROTECTION (AMENDMENT) BILL, 1961.

* THE HON. SRI M. A. MANICKAVELU: Sir, I beg to introduce the Madras Cultivating Tenants Protection (Amendment) Bill[a] 1961, and move—

"That the Bill be taken into consideration".

The Madras Cultivating Tenants Protection Act, 1955 (Madras Act XXV of 1955) was last extended to be in force up to and inclusive of 26th September 1961. The object of the Act is to protect the interests of the cultivating tenants in this State pending comprehensive land reforms. As it will take some time more for ceiling to be imposed on land holdings and for revision of the tenancy laws suitably, the Government consider that the life of the Act should be extended for a further period of two years from 27th September 1961. The Bill accordingly provides for the extension of the life of the Act up to 26th September 1963.

The hon. Members are aware that the Madras Land Reforms (Fixation of Ceiling on Land) Bill, 1960, on the anvil and the House is going to take up in a couple of days.

DEPUTY SPEAKER: Motion moved—

'That the Madras Cultivating Tenants Protection (Amendment) Bill, 1961, be taken into consideration'.

SRI M. KALYANASUNDARAM: Sir, I move—

'That the Bill be referred to a Select Committee consisting of certain Members of the Assembly with instruction that the report be presented before 31st August 1961, with a view to examining what provisions of the main Act require amendments.'

The amendment was duly seconded.

DEPUTY SPEAKER: The motion and the amendment are before the House for discussion.

SRI M. KALYANASUNDARAM: கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்தச் சட்டம் 1955-வது வருஷத்திலிருந்து அமுலில் இருந்து வருகிறது. இப்பொழுது கிட்டத்தட்ட ஆறு வருஷம் பூர்த்தியாகிவிடுகிறது. இன்னும் இரண்டு வருஷத்திற்கு நீடிக்க வேண்டுமென்று அமைச்சர் அவர்கள் கோருகிருர்கள். அவ்வாறு நீடிப்பதைப்பற்றி எனக்கு ஆட்சேபணை இல்லை. நில உச்சவரம்பு நிர்ணயிக்கும் சட்டம் அமுலுக்கு வந்தாலும் கூட இந்தப் பாதுகாப்பு இருக்கவேண்டியது அவசியம். உச்சவரம்புச் சட்டத்தைப் பற்றி நாம் இங்கே விவாதிக்கிற பொழுது அதிலே இருக்கக் கூடிய குறைபாடுகளைப்பற்றி அப்பொழுது பேச விரும்புகிறேன்.

[a] Published in the *Fort St. George Gazette*, dated 2nd August 1961.

இந்த ஆறு வருஷ காலத்தில் இந்தச் சட்டம் குடியானவர்களுக்கு எவ்வளவு அனுகூலம் அளித்திருக்கிறது என்பதைப்பற்றி அமைச்சர் அவர்கள் பரிசீலனை செய்து பார்த்தார்களா? கலெக்டர்கள் மாநாடு கூட்டுகிறார்கள். அங்கே இந்தமாதிரி விஷயத்தை பேசாமல் வேறு என்ன விஷயங்களைப் பற்றி பேசுகிறார்கள் என்று தெரியவில்லை. நில வெளியேற்றம் நடக்கவில்லை என்று அமைச்சர் மேலெழுந்தவாரியாகப் பேசி நம்மை எல்லாம் சிரிக்கவைத்து விடுகிறாரே தவிர, ஆழமாகப் பிரச்சினைகளை ஆராய்வது அவரிடத்தில் அபூர்வமாக இருக்கிறது. நுனிப்புல் மேய்வதுபோல் எதையோ பேசிவிட்டு எதிர்க்கட்சிகாரர்களைக்கூட சிரிக்க வைத்துவிடுகிறார். ஆனால் பிரச்சினையை ஆராய்வதே கிடையாது. இதைப் பற்றி எல்லாம் அவருக்கு தீவிரமான கருத்தும் கிடையாது. ஏதோ திட்டக் கமிஷன் சொல்கிறார்கள், பக்கத்திலே இருக்கக்கூடிய மந்திரிகள் சொல்லுகிறார்கள், ஆகவே தன்னுடைய கடமையை ஏதோ செய்யவேண்டும் என்ற முறையில் நடந்தால் போதாது. எந்த நோக்கத்தோடு இந்தச் சட்டம் இங்கே கொண்டுவரப்பட்டது, அப்பொழுது என்ன வாக்குறுதி அளிக்கப்பட்டது என்பதையெல்லாம் சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

குத்தகைக்கு சாகுபடி செய்யக்கூடிய குடியானவர்கள் கடன் சுமையை தாங்க முடியாமல் அவதியுறுகிறார்கள். அவர்களுக்கு அதிலிருந்து நிவாரணம் அளிக்கவேண்டும். சாகுபடி உரிமையை அவர்களுக்கு வழங்க வேண்டும். இறுதியாக அவர்கள் சாகுபடி செய்யும் நிலத்தை அவர்களுக்கே சொந்தமாக்கிவிடவேண்டும் என்ற நோக்கம் திட்டக் கமிஷன் கொடுத்துள்ள இரண்டு ரிப்போர்ட்டுகளிலும் வலியுறுத்தப்பட்டிருக்கிறது. பார்லிமெண்டில் முன் சமர்ப்பிக்கப்பட்டுள்ள மூன்றாவது ரிப்போர்ட்டிலும் இது இன்னும் தெளிவாக சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது குடியானவர்களுக்கு நிலத்தை சொந்தமாக்கிவிட வேண்டும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இந்தச் சட்டம் அமுலில் இருந்த ஆறு வருஷக்காலத்தில் எத்தனை குடியானவர்கள் பாதுகாக்கப்பட்டார்கள் என்பதை அமைச்சர் அவர்கள் தெரிவிக்க வேண்டும். ஆர். டி. ஒ-க்கள் முன்புதான் இந்த எவிக்ஷன் மனுக்கள் போட முடியும். ஆகவே வெளியேற்றத்திற்காக எத்தனை மனுக்கள் போடப்பட்டன என்பதற்கான புள்ளிவிவரங்களை சேகரிப்பதில் கஷ்டம் இருக்காது. கலெக்டர்களுக்கு எழுதினால் உடனே தகவல் வந்துவிடும். குடியானவர்களை வெளியேற்றுவதற்காக எத்தனை மனுக்கள் போடப்பட்டன, எத்தனை மனுக்கள் குடியானவர்களுக்கு சாதகமாக தீர்ப்பளிக்கப்பட்டன, எத்தனை மனுக்களில் அவர்களுக்கு பாதகமாக தீர்ப்பளிக்கப்பட்டன என்பதற்கு ஒரு ரிப்போர்ட்டு கொடுக்க வேண்டும். ஹைகோர்ட்டிலே ரிவிஷனுக்கு போவதற்கு உரிமை வழங்கப்பட்டிருக்கிறது. அப்படி ரிவிஷனுக்கு எடுத்துச் சென்ற கேஸ்கள் எத்தனை, அவைகளில் குடியானவர்களுக்கு சாதகமாக தீர்ப்பளிக்கப்பட்டவை எத்தனை, நிலச்சுவான்தார்களுக்கு சாதகமாக தீர்ப்பளிக்கப்பட்டவை எத்தனை என்பதற்கு அமைச்சர் அவர்கள் புள்ளி விவரம் கொடுக்கட்டும். நூற்றுக்கு 90-க்கு மேலே குடியானவர்களை வெளியேற்றம் செய்யும் முறையிலேதான் இந்த சட்டம் அமைந்திருக்கிறது. இந்தச் சட்டமே இப்படி இருக்கும்பொழுது, நாங்கள் என்ன செய்ய முடியும் என்று ஹைகோர்ட்டிலே சொல்லுகிறார்கள். இந்தச் சட்டமே வராமல் இருந்திருந்தால் நல்லது என நினைக்க வேண்டியிருக்கிறது. இந்தச் சட்டம் வருவதற்கு முன்னால் குடியானவர்களின் பலத்தை வைத்துக்கொண்டு, அவர்களுடைய கட்டுப்பாட்டை வைத்துக்கொண்டு ஓரளவுக்கு சமாளிக்கமுடிந்தது. தூராக்கிரமாக தங்களுடைய சொந்த நிலத்திலே குடியானவர்கள் பிரவேசித்துவிட்டார்கள் என்று நிலச்சுவான்தார்கள் பொய்க் கேஸ்களை போடுகிறார்கள். அப்படி பொய் சொல்லுவதை வைத்துக்கொண்டுதான் போலீஸ்காரர்கள் ஆர். டி. ஒ.-க்கள் முன்பு வழக்குகள் போடுகிறார்கள். அந்தப் பொய் வழக்குகளைத்தான் அமைச்சர் அவர்கள் கட்சியைச் சேர்ந்த அங்கத்தினர்கள் நம்புகிறார்களேயொழிய குடியானவர்கள் சொல்வதிலே உண்மையிருக்கும் என்ற எண்ணம் ஏற்படுவதே கிடையாது. நங்காவரம் பண்ணையில் எப்படி நடந்து என்பதுபற்றி நான் இந்தச் சபையிலே

24th August 1961] [Sri M. Kalyanasundaram]

எடுத்துச் சொல்லியிருக்கிறேன். சாகுபடி முச்சலிக்கா என்று எழுதி வாங்கிக்கொண்டு, அவர்களை கூலி வேலை செய்பவர்கள் என்று சொல்லி சிவில் கோர்ட்டுகளிலே வழக்குகள் போட்டு நடவடிக்கை எடுத்து குடியானவர்களை வெளியேற்றியிருக்கிறார்கள். இப்பொழுது இந்தச் சட்டத்திலிருக்கக்கூடிய பலஹீனங்களை வைத்துக்கொண்டு, குத்தகை பாக்கி என்பதற்காக வழக்குகள் போடப்பட்டு ஏராளமான குடியானவர்களை நிலத்திலிருந்து வெளியேற்றுகிறார்கள். சட்டத்திலே 'If the cultivating tenant fails to deposit the sum as directed. t e Revenue Divisional Officer shall pass an order of eviction' என்று சொல்லப்பட்டிருகிறது. குத்தகை பாக்கியை உடனே செலுத்துவதற்குத் தவறினால் அவர்களை வெளியேற்றிவிடலாம் என்று இருக்கிறது. கால தவணைகூட கொடுப்பதில்லை. அது ஆர். டி. ஓ.-வினுடைய டிஸ்கிரீஷனுக்கு விடப்பட்டிருக்கிறது. அவர் பார்த்து தவணை கொடுத்தால் கொடுக்கலாம். இல்லாவிட்டால் இல்லை. மூன்று நாட்கள் தவணைக் கொடுக்கலாம் அல்லது மூன்று மாதங்களும் கொடுக்கலாம். ஆனால் தவணை கொடுக்காமல் உடனே கட்ட வேண்டும் என்று உத்தரவு போட்டு உடனே அதைக் கட்டத் தவறினால் நிலத்திலிருந்து வெளியேற்றலாம் என்று இருக்கிறது. இது நிலச்சுவான்தார்களுக்கு ஒரு பெரிய வரப்பிரசாதமாக இருக்கிறது. சிவில் தாவா போட்டால்கூட மூன்று வருஷக் குத்தகை பாக்கிக்குத்தான் கேஸ் போட முடியும். ஆனால் இந்தச் சட்டத்தின் பிரகாரம் ஆறு வருஷம் அல்லது ஏழு வருஷத்திற்கு குத்தகை பாக்கி இருக்கிறது என்று பொய்த் தகவல் கொடுத்து பொய் சாட்சிகளைத் தயார் செய்து வழக்குகளை போட்டால் உடனே அந்தப் பாக்கியை கொடுக்க வேண்டுமென்று ஆர். டி. ஓ. உத்திரவு போடுகிறார். தொகையை செலுத்தத் தவறினால் நிலத்திலிருந்து வெளியேற்றுவதற்கு உத்திரவு போடுகிறார். பணத்தை டெபாசிட்டு செய்தால் ஸ்டே கொடுக்கலாம். அப்படி டெபாசிட் பண்ணாவிட்டால் ஒன்றும் செய்ய முடியாது என்று ஹைகோர்ட்டிலே சொல்லுகிறார்கள். இந்த மாதிரி சம்பவங்கள் ஆயிரக்கணக்கில் இருக்கின்றன. ஹைக்கோர்ட்டு ரிஜிஸ்டிராருக்கு ஒரு கடிதம் எழுதி இந்தச் சட்டத்தின் கீழ் எத்தனை ரிவிஷன் மனுக்கள் தாக்கல் செய்யப்பட்டது, எத்தனை குடியானவர்களுக்கு அனுகூலமாக முடிந்தது, எத்தனை நிலச்சுவான்தார்களுக்கு அனுகூலமாக முடிந்தது என்று புள்ளிவிவரம் கேட்டால் உண்மையான நிலைமை தெரியவரும். நானும் ஒரு அவசரக் கேள்வி கொடுத்திருக்கிறேன். அந்த அவசரக் கேள்வியை அனுமதித்து இந்தத் தகவல்களையெல்லாம் சேகரித்து இந்த சபை முன் வைக்க வேண்டும். இந்தச் சட்டத்திலுள்ள பல பலஹீனங்கள் காரணமாக இந்தமாதிரி நடக்கிறது. ஹைக்கோர்ட்டில் தாக்கல்செய்யப்பட்ட மனுக்கள் சம்பந்தமாக உள்ள வாக்குமூலத்தை அப்படியே நான் கொண்டு வந்திருக்கிறேன். ஆறு வருஷ காலமாக பாக்கியை விட்டுவைத்து நிலச்சுவான்தார்கள் சும்மா இருப்பார்களா என்பதை நாம் சிந்தித்துப்பார்க்க வேண்டும்.

அந்த ரசீது கொடுத்தாலுங்கூட, முசிரி ரெவின்யூ டிவிஷனல் ஆபீசர் என்ன சொல்கிறார் என்று பார்க்கவேண்டும். அய்யம் 10-00 a.m.
பாளையத்தை அடுத்த ஒரு கிராமத்தில் 120 குடியானவர்கள் நிலத்திலிருந்து வெளியேற்றப்பட்டிருக்கிறார்கள். ஒவ்வொருவரும் ஆயிரம் ரூபாய் முதல் மூவாயிரம் ரூபாய்வரை குத்தகை பாக்கி கொடுக்கவேண்டுமென்றும், அதனால் நிலத்திலிருந்து வெளியேறவேண்டுமென்றும் தீர்ப்பு கொடுத்திருக்கிறார். ஆறு வருஷங்களாக குத்தகை பாக்கி என்று நிலச்சொந்தக்காரர்கள் மனுச் செய்திருக்கிறார்கள். உச்ச வரம்பு மசோதா வருவதற்கு முன்பே குடியானவர்களை நிலத்திலிருந்து வெளியேற்றி, நிலத்தைச் சொந்த சாகுபடிக்கு எடுத்துக்கொள்ளவேண்டும் என்ற காரணத்திற்காகத்தான் இம்மாதிரி பொய் வழக்குகள் தொடர்ந்து இருக்கிறார்கள். ஒவ்வொரு வருஷமும் குத்தகை பெற்றுக்கொண்டதற்கான ரசீது கொடுக்கப்பட்டிருக்கிறது. அந்த ரசீதுகளை ரெவினியூ டிவிஷனல் ஆபீசரிடம் காட்டினால், அவர் என்ன சொல்கிறார்கள் என்றால், "குத்தகை கொடுத்ததற்கான ரசீது இது; கொடுக்கத் தவறிய பாக்கி இருக்கலாம்" என்று சொல்கிறார். எழுத வேண்டிய அவசியம் இல்லை

[Sri M. Kalyanasundaram] [24th August 1961

என்றாலும், நிலச் சொந்தக்காரர்கள் சொல்கிறார்கள் என்பதற்காக "பாக்கியிருக்கிறது" என்று ஆர். டி. ஓ. தீர்ப்புக் கொடுத்திருக்கிறார். இந்த ஆர். டி. ஓ.-வை யார் கவனிப்பது? இப்படித் தீர்ப்புக் கொடுத்த ஆர். டி. ஓ.வின் நடத்தையைப்பற்றி சர்க்கார் ஆலோசிக்க வேண்டாமா? ஆர். டி. ஓ. எந்தக் காரணத்தினால் அப்படிச் செய்கிறார் என்பதை யோசிக்க வேண்டாமா? சட்டம் இயற்றின சமயத்தில், ஆர். டி. ஓ.வுக்கு இந்த அதிகாரம் கொடுத்தது நியாயமா என்பதை இப்பொழுது யோசிக்க வேண்டியிருக்கிறது. சென்ற ஐந்து வருஷங்களில் பார்த்தால், நூற்றுக்கு 90 பொய் வழக்குகளைக் கூட அனுமதித்துக்கொண்டு, நிலத்திலிருந்து வெளியேறவேண்டும், அதுவும் மூவாயிரம் ரூபாய் வரையில் குத்தகைப் பாக்கித் தொகையைக் கட்டிவிட்டு வெளியேறவேண்டும் என்று உத்தரவு போடப்பட்டிருக்கிறது. குடியானவன் எங்கிருந்து மூவாயிரம் ரூபாய் கட்ட முடியும்? குடியானவன் என்றால் அவன் பொய் சொல்லக் கூடியவன் என்று அமைச்சர் அவர்களுடைய அகராதியில் குறித்து வைத்துக்கொண்டிருக்கிறார் என்று நினைக்கிறேன். சேதுராம் பிள்ளை போன்றவர்கள் பெரிய கார் வைத்துக்கொண்டு போனால், அவர்கள் சொல்வதெல்லாம் உண்மையாக இருக்கும், ஏழை, எளிய குடியானவன், நிலத்திலே பாடுபடக்கூடியவன் சொல்வதெல்லாம் பொய்யாக இருக்கும் என்று அமைச்சர் அவர்களுடைய உள்ளத்தில் இருப்பதால் அடிக்கடி அதே அடிப்படையில் அவர் பதில் சொல்கிறார். ஒரு ஸ்பெஷல் ஆபீசரை நியமித்து, ஆர். டி. ஓ. அளித்த தீர்ப்புகள் எல்லாவற்றையும் வரவழைத்துப் பரிசிலனை செய்து பார்க்கட்டும். ஆர்.டீ.ஓ. நியா மான விவரங்கள் அடிப்படையில் தீர்ப்பு அளித்திருக்கிறாரா, அக்கிரமமான அளவுக்கு தீர்ப்பு அளித்திருக்கிறாரா என்று பரிசீலிக்க வேண்டிய அவசியம் இருக்கிறது.

புதிய முறைகளைக் கண்டுபிடித்து, குத்தகை முச்சலிகா இல்லை என்ற காரணத்திற்காக வெளியேற்றுகின்றது இன்னும் நடந்துகொண்டிருக்கிறது. அவர்களுக்கு நல்லெண்ணம் இருக்கும் வரையில் சரி என்று இருப்பார்கள். ரசீதுகொடுக்க வேண்டும், குத்தகை முச்சலிகா இருக்கவேண்டும் என்று எத்தனை குடியானவர்களுக்கு தெரியும்? மூன்று நகல்கள் எடுத்து, ஒன்றை ரிஜிஸ்தர் செய்து தாசில்தாருக்கு அனுப்பவேண்டும் என்பன போன்றவையெல்லாம் குடியானவனுக்குத் தெரிவதில்லை. சட்ட ஞானம் உள்ள வக்கீல்களின் உதவி ஒரு கிராமத்திலேயுள்ள குடியானவனுக்குக் கிடைக்காது. அதனால்தான் இதெல்லாம் நடக்கிறது. எந்தக் கிராமத்தில் விஷயம் தெரிந்த வாலிபர்கள், தன்னலமற்று சேவை செய்யக்கூடிய வாலிபர்கள், நிலப் பிரபுக்களின் கொடுமைகளை எதிர்த்து விழிப்போடு இருக்கக்கூடிய வாலிபர்கள், இருந்து குடியானவர்களுக்குப் பாதுகாப்பு கொடுக்கிறார்களோ, அந்தக் கிராமங்களிலே ஓரளவு பாதுகாப்பு ஏற்பட்டிருக்கிறதே தவிர, மற்றக் கிராமங்களில் பொய் வழக்குகள் போட்டு, போலீஸ் உதவியைக்கொண்டு பல காரியங்கள் செய்யப்படுகின்றன. நண்பர் திரு. ஸ்ரீனிவாச அய்யர் அவர்கள் சொன்னதுபோல்—கலகம் செய்தார்கள் என்று பொய் வழக்கு இருக்கும். நிலத்திற்கும் தனக்கும் சம்பந்தம் இல்லை என்று எழுதிக் கொடுக்கப்பட்டும் இருக்கும். நிலச் சுவாந்தார்கள் என்ற காரணத்திற்காக அவர்கள் சொல்வதைக் கேட்டுக் கொண்டு, உத்தரவு இடவேண்டியது, நிலத்தை விட்டு வெளியேற்ற வேண்டியது என்று இருக்கிறது.

இதற்கெல்லாம் காரணம் 1955-ம் வருஷத்தில் ஏற்படுத்திய சட்டத்திலே இருக்கும் குறைபாடு. அன்றைக்கு செலக்ட் கமிட்டியில் அங்கம் வகித்த என்னுடைய கட்சியைச் சார்ந்த அங்கத்தினர்கள் கொடுத்திருக்கும் ஆட்சேபணைக் குறிப்பைப் பார்க்கட்டும். நாங்கள் எவ்வளவு தூர திருஷ்டியோடு சட்டம் எப்படியிருக்கவேண்டும் என்று அப்பொழுது யோசனை கூறினோம். ஆனால், அமைச்சர் அவைகளை நிராகரித்துவிட்டு சட்டத்தை இயற்றினார்கள். அதன் பலன் என்ன ஆயிற்று? ஆறு வருஷ காலத்தில் நில வெளியேற்றம் செய்தார்கள் என்று வழக்குகள் அதிகரித்திருக்கின்றன. ஹைகோர்ட்டுக்கு எத்தனை ஸிவில் ரிவிஷன் பெடிஷன்கள் 6-வது பிரிவின்படி வந்திருக்கின்றன என்று பார்க்

24th August 1961] [Sri M. Kalyanasundaram]

கட்டும். இரண்டு வருஷங்களில் இதற்குக் கொடுத்த பெடிஷன்கள் நிறைய இருக்கின்றன. ஒவ்வொரு வருஷமும் எவ்வளவு வந்திருக்கிறது என்று பார்க்கட்டும். ஹை கோர்ட்டுக்கே ஆயிரக்கணக்கில் பெடிஷன்கள் வந்திருக்கின்றன என்றால், சட்டத்தைப்பற்றித் தெரியாதவர்கள், விவசாயிகள் ஒன்று சேர்ந்து தங்களுடைய உரிமையைப் பாதுகாக்கக்கூடிய சக்தி இல்லாத கிராமங்களிலே எந்த அளவுக்கு வெளியேற்றம் ஏற்பட்டிருக்கும் என்பதை யூகித்துக்கொள்ளவேண்டும். சட்டம் அமுலில் இருந்த காலத்தில் இந்தச் சட்டத்தினால் நன்மையை விட கெடுதல் தான் அதிகமாயிருக்கிறது, குடியானவர்களுக்கு. ஆனால், நிலப் பிரபுக்களுக்கு வசதி ஏற்பட்டிருக்கிறது.

இன்டஸ்ட்ரியல் டிஸ்ப்யூட்ஸ் ஆக்ட்டின் கீழ் தொழிலாளர்களுக்குப் பாதுகாப்பு இருக்கிறது. அதிலே ஓரளவு லிடிகேஷன் இருக்கிறதென்றால், அட்ஜூடிகேஷனுக்கு விட்டால் கால தாமதம் ஆகிறது. கால தாமதம் ஆனாலுங்கூட, அதிலே ஓரளவு பாதுகாப்பு இருக்கிறது. இன்டஸ்ட்ரியல் டிஸ்ப்யூட்டை விசாரிப்பதற்கு என்று தனி கோர்ட்டுக்கள் இருக்கின்றன. தனி நீதிபதிகள் இருக்கிறார்கள். அவர்களுடைய மனோபாவம் வேறு. ஆனால், விவசாயிகள் சம்பந்தமாக, ரெவின்யூ டிவிஷனல் ஆபீசர், தாசில்தார் நியமிக்கப்பட்டிருக்கிறார்கள். இவர்கள் எல்லாம் ஏதோ ஒரு நோக்கத்தை வைத்துக்கொண்டு தீர்ப்பு எழுதுகிறார்களே தவிர, குடியானவர்களுக்கு உள்ள உரிமையைப் பாதுகாக்கவேண்டுமென்றோ, சர்க்காருடைய கொள்கையை அமுல் நடத்தவேண்டுமென்றோ எழுதுவதில்லை. லீடி டெனன்ட்ஸ் ப்ரொடெக்ஷன் சட்டம் நிறைவேறும் போது செய்த பிரசங்கங்கள், அதிலே அமைச்சர் அவர்கள் கொடுத்த வாக்குறுதி இவற்றையெல்லாம் கலெக்டர்களுக்கோ, ஆர்.டி.ஒ-வுக்கோ அனுப்பி வைத்து, இம்மாதிரி தாவா வரும்போது என்ன கொள்கை இருக்க வேண்டும்என்பதைப்பற்றி அவர்களுக்கு விஷயம் சொன்னால் பரவாயில்லை. சட்டம் செய்யும்போது ஒரு டிஸ்ட்ரிக்ட் முன்சிப்புக்கு இந்த அதிகாரம் கொடுப்பதைவிட, ரெவின்யூ டிவிஷனல் ஆபீஸருக்குக் கொடுத்தால், அவர் நிர்வாகத் துறையில் இருப்பதால், அரசாங்கத்தின் கொள்கையை அமுல் நடத்த வேண்டுமென்ற கொள்கையோடு வேலை செய்வார்கள். ஆர்.டி.ஒ-.வினிடத்தில் அதிகாரம் கொடுப்பது வரவேற்கத்தகுந்தது என்று சொன்னோம். ஆனால், இன்றைக்கு அனுபவம் வேறாக இருக்கிறது. சென்ற ஐந்தாறு வருஷ அனுபவத்தை வைத்துக்கொண்டு பார்க்கும்போது, ரெவின்யூ டிவிஷனல் அதிகாரியினுடைய குற்றமா, நிர்வகிக்கக் கூடிய அமைச்சருடைய குற்றமா, அல்லது அவருடைய இலாகாவின் குற்றமா, அவர்களுக்கு இந்தக் கொள்கையில் நம்பிக்கை இல்லாதது காரணமா என்று தெரியவில்லை. ரெவின்யூ டிவிஷனல் ஆபீசர்களுக்கு அரசாங்க இலாகா ஏன் சரியான வழி காட்டவில்லை என்று நான் கேட்க விரும்புகிறேன். பஞ்சாயத்துச் சட்டத்தை அமுலுக்குக் கொண்டுவரும்போது, கலெக்டர்கள் மாநாடு நடத்தி, சட்டத்தின் நோக்கங்களை விளக்கி, எப்படி எப்படி செயலாற்ற வேண்டும் என்று வாதிக்கப்படுகிறது. அதுபோல், கல்டிவேடிங் டெனனட்ஸ் ப்ரொடக்ஷன் சட்டத்தைப் பொறுத்தும், அதிகாரிகளைக் கூட்டி வைத்து, குடியானவர்களுக்கு நிலத்தைச் சொந்தமாக்கவேண்டுமென்ற நோக்கம் இருக்கிறது, அதற்குக் காலம் ஆகும், அதையனுசரித்து பாதுகாப்புச் சட்டம் கொண்டுவந்திருக்கிறோம், அதற்குத் தகுந்த மாதிரி நிர்வாக அதிகாரத்தை உபயோகிக்கவேண்டுமென்று அவர்களுக்கு யோசனை கூறியிருந்தால், ஆர்.டி.ஓ. சிறந்த முறையில் ஓரளவு உத்தரவு கொடுத்திருக்க முடியும். அதற்கு பதிலாக இம்மாதிரி சட்டத்திலே இருக்கும் கோளாறு, அமைச்சரிடத்திலே இருக்கும் அசிரத்தை இரண்டையும் பயன் படுத்தித் தந்திருக்கும் தீர்ப்புகள் நூற்றுக்குத் தொண்ணூறு குடியானவர்களுக்கு விரோதமாகவே போய்க்கொண்டிருக்கின்றன. இத்தனை குடியானவர்களும் பொய் சொல்லக் கூடியவர்கள், ஒருசில நிலச் சுவாந்தார்களும், ஆர்.டி.ஓ.க்களும் தான் இந்த நாட்டிலே ரொம்ப உத்தமர்கள் என்ற முடிவுக்கு வந்துவிடுவதா ?

ரெண்ட் தாசில்தாராகப் போடுகிறவரையாவது யோக்கியமானவராகப் போடுகிறார்களா என்றால், அதுவும் இல்லை. 80, 90 ஏக்கர் நிலம் சொந்தமுள்ள குடும்பத்தில் பிறந்த ஒரு மனிதனை ரெண்ட் தாசில்

தாராகப்போட்டவுடனே அவர் என்ன செய்கிறர் ? ஏற்கனவே ஒரு ஏக்கருக்கு 35 கலம் குத்தகை என்று இருந்தது. அதே நிலத்திலிருந்து 40 கலம் குத்தகை தரவேண்டுமென்று நியாய வாரத்தீர்ப்பு பண்ணுகிறர். 40 கலம் நியாய வாரம் என்றுல், அந்த நிலத்தில் 100 கலமாவது விளையவேண்டும். 40 கலம் என்று குத்தகையை உயர்த்துகிறர்கள். நியாய வாரச் சட்டத்தின் நோக்கம் அதுதானு என்று கேட்கிறேன். இதைப் பற்றி நான் பல சந்தர்ப்பங்களில் பேசியிருக்கிறேன். அமைச்சருக்குக் கடிதமும் எழுதியிருக்கிறேன், ஒரு குறிப்பிட்ட தாசில்தாரைப்பற்றி. அவர் கொடுத்த தீர்ப்பைப் பரிசீலித்துப் பார்க்கவேண்டாமா அமைச்சர் அவர்கள்? பரிசீலனை செய்வதற்கு அவகாசம் எடுத்துக்கொள்ளவேண்டாமா ? இன்டஸ்ட்ரியல் டிஸ்ப்யூட்ஸ் ஆக்ட் எந்த விதத்தில் அமுல் நடத்தப்படுகிறது என்பதைப்பற்றி "எவால்யூவேட்" பண்ணுகிறர்கள் மத்திய அரசாங்கத் தார். அந்த அடிப்படையில் நம்முடைய அரசாங்கத்திற்கு உண்மையிலேயே குடியானவர்களுக்குப் பாதுகாப்பு கொடுக்கவேண்டும் என்ற எண்ணம் இருந்தால், நியாய வாரச் சட்டம் சரியான முறையில் அமுல் நடத்தப்படுகிறதா, இதனுல், சாகுபடி செய்யக்கூடியவர்களுடைய வாழ்க்கைத்தரம் உயருகிறதா, குடியானவர்கள் விளைச்சலைப் பெருக்கும் பணியில் உற்சாகமாக ஈடுபடுகிறர்களா என்று சென்ற ஐந்து வருஷ பலா பலனைப் பரிசீலனை செய்தது உண்டா என்று நான் கேட்கிறேன். சட் டத்தினுல் என்ன நன்மை ஏற்பட்டது, என்ன தீமை ஏற்பட்டது, என்ன என்ன அம்சங்களில் சட்டம் திருத்தப்படவேண்டும், இதைப் பயன்படுத்தி எத்தனை நில வெளியேற்றங்கள் ஏற்பட்டிருக்கின்றன என் பதைப் பரிசீலனை செய்வதற்கு ஒரு நடவடிக்கை எடுத்தது உண்டா என்று கேட்கிறேன். எதிர்க் கட்சியினர் எடுத்துக்காட்டிய உண்மைகள் அத்தனையும் ஏளனம் பண்ணி, நகையாடி அமைச்சர் பிரசங்கம் செய்து விட்டார். ஆனுல், கிராம மக்கள், கிராமத்திலே வசிக்கின்ற விவசாயிகள் நில வெளியேற்றத்தினுல் அவதிப்பட்டு அவர்கள் குமுறிக்கொண்டிருக் கிறர்கள். விவசாயிகளுக்கு நன்மை செய்யப்படவில்லை. வரக்கூடிய உச்ச வரம்புச் சட்டத்திலே கூட இதைவிட மோசமான நிலைமை இருக்கிறது. குடியானவர்களுக்கு உற்சாகத்தை உண்டாக்குவதற்குக் கடந்த ஆறு வருஷங்களில் தவறிவிட்டிருக்கிறர்கள். இனியும் அவர்களுடைய உற்சாகத் திற்கு உலைவைக்கப் போகிறர்கள். விவசாயிகள் மீது அமைச்சர் அவர் களுக்கு அக்கறை இருந்தால், அவர்களுடைய உற்சாகத்தைக் குலைக்கக்கூடிய முறையில் இப்படி நடவடிக்கை எடுத்திருக்க மாட்டார்கள். அடுத்தது வரப்போகிற சட்டத்தினுல் குத்தகை சாகுபடி செய்கின்ற ஒரு வர்க்கமே அழிந்துவிடும். நிதி அமைச்சர் கூட மறைமுகமாக ஒப்புக் கொண்டார். கம்யூனிஸ்ட்க் கட்சிக் கொள்கையும் அப்படித் தானே, டெனன்ட் இருக்கக் கூடாது என்பது தானே என்கிறர். அவர் ஒரு உண் மையை ஒத்துக்கொள்ளவேண்டும். அதாவது டெனன்டுக்கு நிலத்தைச் சொந்தமாக்கவேண்டும் என்று நாங்கள் சொல்கிறேம்.

" நீங்கள் டெனன்ட்ஸ் என்று இருக்கக்கூடாது என்று சொல்கிறீர்கள். நாங்கள் நிலத்தை நிலச் சொந்தக்காரர்களுக்குச் சொந்தமாக்கிவிட்டு சட்ட பூர்வமாக டெனன்ட்ஸ் என்றே இல்லாமல் தான் செய்யப்போகிறேம். உங்கள் கொள்கைதான் நிறைவேறிவிட்டதே " என்று சொல்வது போல இருக்கிறது. திரு. சுப்பிரமணியம் அவர்கள் " இனி டெனன்ட்ஸ் என்றே இருக்கமாட்டார்கள் " என்று சொன்னது, இன்னும் இரண்டு வருஷ காலத் தில் ஒரு டெனன்ட் கூட இருக்கமாட்டான். அதற்காகத்தான் இன்னும் இரண்டு வருஷத்திற்கு இந்த டெனன்ட்ஸ் ப்ரொடெக்ஷன் ஆக்டை நீடிக்கி றர்களோ என்று நினைக்கவேண்டியிருக்கிறது. இன்னும் இரண்டு வரு ஷத்திலேயே பலர் நிலம் இல்லாத கூலியாட்களாக மாறிவிடக்கூடிய நிலைமைதான் இருக்கிறது. ஆகவே சற்றுக் கவனித்துப் பார்க்கவேண்டு மென்று கனம் அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொள்கிறேன்.

இப்படியே இந்தச் சட்டத்தை இன்னும் இரண்டு வருஷ காலம் நீடிப்ப தனுல் எவ்விதப் பயனும் ஏற்படாது. விவசாயிகளுக்கு எந்தவிதமான லாபமும் ஏற்படாது என்று தெரிவித்துக்கொள்கிறேன். குத்தகை

24th August 1961] [Sri M. Kalyanasundaram]

பாக்கிக்காக நிலத்தைவிட்டு வெளியேற்றுவதற்குள் சரியானமுறையில் விசாரணை நடத்தித் தீர்ப்புக் கூறவேண்டும். சட்டப்படி உள்குத்தகை என்று இப்போது இருந்தால் பாதுகாப்பு கிடையாது. குத்தகைப் பத்திரத்தை விவசாயியும், நிலச்சுவாந்தாரும் சேர்ந்து ரத்து செய்துவிடுகிறார்கள். இப்போது மூன்று நகல் எடுத்து ரிஜிஸ்ட்டர் செய்யவேண்டும் என்பதே நிலச்சுவாந்தார்களுக்குச் சாதகமாகத்தான் இருக்கிறது. இன்னொன்று. கிராம அடங்கலில் நிலம் யாருக்குச் சொந்தம், யார் குத்தகைக்கு வைத்துக் கொண்டிருக்கிறார் என்கிற விவரம் கர்ணத்தினால் எழுதப்படுவதில்லை. பலவிடங்களில் கர்ணங்கள் நிலச்சுவாந்தார்களுக்குச் சாதகமாகவே இருக்கிறார்கள். சொந்தச் சாகுபடி என்பதாக நிலச்சுவாந்தார்களுக்கு அனுகூலமாகவே எழுதியிருக்கிறார்கள். குடியானவனோடு நிலச்சுவாந்தாருக்கு விரோதம் ஏற்படும்போது—இது என்னுடைய சொந்தக் குத்தகை என்று அந்தக் கிராம அடங்கலைக் காட்டி குடியானவனை நிலத்தைவிட்டு வெளியேற்றிவிடுகிறார்கள். இந்தக் கிராம அடங்கலைக் கர்ணம் சரியானமுறையில் பதிவு செய்வதற்குத் தாசில்தார்கள் என்ன நடவடிக்கை எடுத்தார்கள் என்று கேட்கிறேன். நிலம் யாருக்குச் சொந்தம், யார் குத்தகைக்கு வைத்துக்கொண்டிருக்கிறார், கிராம அடங்கலில் என்ன கண்டிருக்கிறது என்பதைச் சரியானமுறையில் பரிசிலனை செய்தார்களா என்று கேட்கிறேன். அல்லது அப்படிச் செய்யும்படியாக சர்க்காராவது உத்தரவு கொடுத்தார்களா என்று கேட்கிறேன். கடந்த ஐந்து வருஷ காலமாக இந்தச் சட்டத்தின் உதவியைக்கொண்டு சட்டபூர்வமாகவே குடியானவர்களை நிலத்திலிருந்து வெளியேற்றி வந்திருக்கிறார்கள். சட்டத்தைப்பற்றி ஒன்றுமே தெரியாத கிராமங்களில் குடியானவர்களை நிலச்சுவாந்தார்கள் தங்கள் சொந்த பலத்தைக் கொண்டு, ரௌடிகளின் பலத்தைக்கொண்டு பலாத்காரமாக வெளியேற்றிருக்கிறார்கள் அவ்வளவு தான். நான் இப்போது இங்கே கொடுத்திருக்கக்கூடிய தகவல்கள் அத்தனையும் திருச்சி ஜில்லாவிலுள்ள ஐயம்பாளையம் என்ற ஒரே ஒரு கிராமத்தைச் சேர்ந்தவை. இவர்கள் அத்தனை பேர்களும் ஏதோ ஒரு காரணத்திற்காக நிலத்திலிருந்து வெளியேற்றப்பட்டிருக்கிறார்கள். உயர்நீதி மன்றத்தில் இவ்வளவுக்கும் வழக்கு போடப்பட்டிருக்கிறது. உயர்நீதி மன்றத்தில் கம்யூனிஸ்ட்டுக் கட்சிக்கு திரு. மோகன் குமாரமங்கலம், திரு. வி. ஜி. ராவ் போன்ற தன்னலமற்ற வழக்கறிஞர்கள் இருப்பதனாலேயே இந்த ஏழைக் குடியானவர்களால் உயர்நீதி மன்றம் வரையிலும் வர முடிகிறது. இல்லாவிட்டால் இந்த ஏழைகளின் வழக்கை எடுத்துக்கொண்டு வாதாடுவதற்கு ஆட்களே இல்லாமல் போயிருக்கும். உயர்நீதி மன்றத்திற்கு வருவது என்றால் அவ்வளவு சுலபமான காரியம் அல்ல. கனம் அமைச்சர் அவர்கள் கொடுத்த பாதுகாப்பினாலே அவர்கள் இங்கு வரவில்லை. ஆனாலும் இங்கே என்ன ஆகிறது ? சட்டத்திலுள்ள குறைபாட்டினால் அவர்களுடைய நியாயமான வழக்குகளில்கூட பிரதிகூலமான தீர்ப்பு ஏற்பட்டுவிடுகிறது. ஆகவே நான் சொன்ன கருத்துக்களின் அடிப்படையில் இந்தச் சட்டத்தைத் திருத்த வேண்டுமென்று கேட்டுக்கொண்டு முடித்துக்கொள்கிறேன்.

SRI V. SANKARAN : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்தச் சட்டத்தில் ஒரு சில குறைபாடுகள் இருக்கலாம். இருந்தபோதிலும் இந்தச் சட்டத்தை செலக்ட் கமிட்டிக்கு அனுப்பி புதிதாக மாற்றவேண்டிய அவசியம் இல்லை. ஒன்றிரண்டு குறைகள் இருந்தால் அதை இங்கேயே எடுத்துச் சொல்லி அதன் மூலம் திருத்தங்கள் செய்யப்படலாம் என்று நான் நினைக்கிறேன்.

பொதுவாக திரு. கல்யாணசுந்தரம் அவர்கள் பேசும்போது ஒரு சில குறைபாடுகளைச் சொன்னார். பொதுவாக ரெவின்யூ டிவிஷனல் ஆபீஸர்கள் விவசாயிகளுக்குச் சாதகமான தீர்ப்புகளைக் கொடுப்பதில்லை என்றார். ஒரு சில இடத்தில் தவறுகள் இருக்கலாம். குடியானவர்களுக்குச் சரியானபடி ஒரு சில ரெவின்யூ டிவிஷனல் ஆபீஸர்கள் தீர்ப்பளிக்கவில்லை என்று சொன்னதுபோல ஒரு சில இடங்களில் சட்டத்தில் குறிப்பிட்டிருப்பதையும் மீறி, சட்டவரம்புக்கும் மேற்பட்டு விவசாயிகளுக்குச் சாதகமாக, நிலச்சுவாந்

தார்களுக்குப் பாதகமாகத் தீர்ப்புகள் வழங்கப்பட்டிருக்கின்றன என்ற புகாரும் இருக்கிறது. இதுவே டெனன்ட்ஸ் ப்ரொடெக்ஷன் ஆக்ட் என்பதனால் குடியானவர்களுக்குச் சாதகமாகவே தீர்ப்பளிக்கவேண்டும் என்ற தவறான அபிப்பிராயம் கொண்டு சில இடங்களில் ரெவின்யூ டிவிஷனல் ஆபீஸர்கள் சட்ட விதிக்கும் மேலாகச் சென்று குடியானவர்களுக்குச் சாதகமாகத் தீர்ப்பளித்திருக்கிறார்கள். ஆக இப்படி இரண்டு பக்கத்திலும் கேஸ்கள் இருக்கின்றன. ரெவின்யூ டிவிஷனல் ஆபீஸர்கள் மீது புகார்கள் வருகின்றன. ஆகவே இன்றையதினம் திரு. கலியாணசுந்தரம் சொன்னது போல ரெவின்யூ டிவிஷனல் ஆபீஸர்கள் மீது பொதுவாகப் புகார் சொல்லக்கூடாது என்று தெரிவித்துக்கொள்கிறேன்.

இரண்டாவதாக முன்பு கம்யூனிஸ்ட் அங்கத்தினர்கள்தான் இந்த வழக்குகளை முனிசீப் கோர்ட், ஜில்லாக் கோர்ட்டுகள் விசாரிக்கும்படியாகச் செய்யக்கூடாது, இது குடியானவர்களுடைய பாதுகாப்புச் சட்டமாதலால் சீக்கிரமாக முடிவு செய்யப்படவேண்டும், முனிசீப் கோர்ட்டுகளுக்குப் போனால் மிதமிஞ்சிக் காலதாமதம் ஆகலாம், ஆகவே ஆர்.டி.ஓ.-க்களையே விசாரணை ஆபீஸர்களாகப் போடவேண்டும் என்று சொன்னார்கள். இன்றைக்கு நினைத்து நினைத்து அதை மாற்றிக்கொண்டிருப்பது சரியாக இருக்காது என்று தெரிவித்துக்கொள்கிறேன்.

இன்னொன்று. பஞ்சாயத்து ஆக்ட் முதலியவற்றை நிறைவேற்றிய உடன் சம்பந்தப்பட்ட அதிகாரிகளை எல்லாம் அழைத்து சட்டத்தின் நோக்கம் என்ன அதை எவ்வாறு நிறைவேற்றவேண்டும் என்பதைப்பற்றி இன்ஸ்ட்ரெக்ஷன் கொடுத்ததுபோல இந்தச் சட்டம் சம்பந்தமாகவும் ஆர்.டி.ஓ.-க்களுக்கு ஏன் இன்ஸ்ட்ரெக்ஷன் கொடுக்கக்கூடாது என்றார்கள். இந்தச் சட்டத்தின் நோக்கமோ ஜுடிஷியல் அடிப்படையில் அமைந்திருப்பது. அது எக்ஸிக்யூடிவ். பஞ்சாயத்து யூனியன் சட்டம் போன்ற எக்ஸிக்யூடிவ் நடவடிக்கைகளுக்கு இன்ஸ்ட்ரெக்ஷன் கொடுக்கலாம், இப்படிச் செய், அப்படிச் செய் என்று உத்தரவு போடலாம். ஆனால், இது ஜுடிஷியல் நேச்சர் ஆனதால் விசாரணை அதிகாரிகளுக்கு இன்ஸ்ட்ரெக்ஷன் கொடுக்க முடியாது. சட்டம் இருக்கிறது. அதை வைத்துக்கொண்டு வருகிற வழக்குகளுக்கு ஏற்ப விசாரணை செய்து அவர்களேதான் நியாயமாகத் தோன்றுகிற தீர்ப்புகளைச் சட்டப்படி வழங்கியாகவேண்டும். தீர்ப்பு சட்டப்படி, கேஸ்களுக்கு ஏற்றபடி, விசாரணை செய்த பிறகு அவருடைய சொந்த அபிப்பிராயப்படி இருக்கவேண்டுமே தவிர சர்க்கார் இன்ஸ்ட்ரெக்ஷன் கொடுப்பது என்பது சரியாகாது. அது முறையும் அல்ல.

அடுத்தபடியாக, கணக்குப் பிள்ளைகள் நிலச்சுவாந்தார்களுக்கு அனுகூலமாக இருக்கிறார்கள் என்று சொன்னார். இது ஒரு சில இடங்களில் உண்மையாக இருக்கலாம். அதைப் போல ஒரு சில இடங்களில் கணக்குப் பிள்ளைகள் மிகத் தீவிரவாதிகளாக இருக்கிறார்கள். நிலச்சுவாந்தார் சொந்த சாகுபடியில் வைத்துள்ள நிலத்தைக்கூட குடியானவர்கள் பேரில் குத்தகைக்கு வைத்திருப்பதாக எழுதி வைத்திருக்கிறார்கள். இதனால் நிலச்சுவாந்தார்கள் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள். ஆகவே இரண்டு பக்கத்திற்கும் பொதுவாக இருப்பதை பொதுக் குறையாகச் சட்டத்தில் சொல்லக் கூடாது. அவ்வப்போது பார்த்துத்தான் அந்தத் தவறுகளைத் திருத்திக்கொள்ளவேண்டும்.

அடுத்தபடியாக "குத்தகை பாக்கிகள்" பற்றி ஒரு சில குறைபாடுகளைத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். உதாரணமாக குத்தகை பாக்கிக்காக கேஸ்கள் போடும்போது, பெட்டிஷன் போடும்போது அட்மிடெட் குத்தகையையாவது அந்தக் காலத்திற்குக் கோர்ட்டில் கட்டும்படியாக சட்டத்தில் இடம் இருக்கவேண்டும். இதைப்பற்றிக் கூட ஹைக்கோர்ட் தீர்ப்பு இருக்கிறது. ஆறுமாதம், ஒரு வருஷம் என்று கேஸ் நீடித்தால் கூட இந்தக் காலத்திற்குரிய அட்மிடெட் குத்தகைகூட கட்டப்படாமல் பழைய பாக்கியோடு சேர்ந்து போகிறது. மறுபடியும், மறுபடியும் இந்தப் பாக்கிக்காக கேஸ் போடவேண்டிய சிக்கல் வருகிறது. தனித்தனியாக பெட்டிஷன் போட்டுக் கொண்டே இருப்பதனால் சிரமம், காலதாமதம் எல்லாம்

24th August 1961] [Sri V. Sankaran]

ஏற்படுகிறது. ஆகவே உடனடியாக பழைய பாக்கிக்காக கேஸ் நடக்கிற காலத்தில் புது பாக்கி ஏற்படாமல் இருக்க வழக்கு முடியும் காலத்திற்குள் குத்தகை கட்டவேண்டியிருந்தால் அட்மிடெட் ரென்டையாவது கோர்ட்டில் கட்டும்படியாக வழி செய்யப்படவேண்டும் என்பதாக கேட்டுக்கொள்கிறேன். நிலச் சொந்தக்காரருக்கும், குத்தகைதாரருக்கும் தகராறு ஏற்படுகிறது. இரண்டு பேர்களுக்கும் ஒருவர் மேல் ஒருவர் ஏதோ காரணத்தைச் சொல்லி குத்தகைப் பிரகாரம் கொடுக்கவேண்டிய பணம் கொடுக்கப்படாமல் இருக்கின்றன. நிலச் சொந்தக்காரரைக் கேட்டால் டெனன்ட் கொடுக்கவில்லை என்று சொல்லுகிறார். டெனன்ட் என்ன சொல்லுகிறார் என்றால் நிலச் சொந்தக்காரர் வீட்டுக்குச் சென்றபோது அவர் வீட்டில் இல்லை அதனால் தான் குத்தகைப் பணம் கொடுக்கப்படவில்லை என்று சொல்லுகிறார். இம் மாதிரி மேல்வாரியாகவே விசாரித்துவிட்டு கடைசியில் கோர்ட்டில் பணத்தைக் கொடுக்கிறார்கள். இதனால் கொஞ்சம் கஷ்டம் ஏற்படுகிறது. ஏனென்றால் அப்போது கொடுக்கிற சமயத்தில் மார்க்கட் வேல்யூ குறைந்திருக்கும். ஹைகோர்ட் தீர்ப்புப்படி பணத்தைத்தான் கொடுக்க முடியும். நெல்லைக் கொடுக்க முடியாது. இதனால் அவர்களுக்குப் பாதகம்தான் ஏற்படுகிறது. சில இடங்களில் நெல்லைக்கூட பணத்திற்குப் பதில் கொடுக்கிறார்கள். இது மாதிரி மற்ற இடங்களிலும் பணத்திற்குப் பதில் நெல்லாகக் கொடுப்பதற்கு வழிவகை செய்யவேண்டும்.

அடுத்தபடியாக ரெவின்யூ டிவிஷனல் ஆபீசருக்கு பல வேலைகள் இருக்கின்றன. அதுவும் டெவெலப்மென்ட் வொர்க்ஸ் இப்போது அதிகமாக இருப்பதால் அவர்களுக்கு அவகாசமே இருப்பதில்லை. அப்படியிருக்கும்போது அவர்கள் இம்மாதிரி விஷயங்களையும் கவனிக்கயிருப்பதால் பல மணி நேரம் தாமதப்படக்கூடிய நிர்ப்பந்தம் ஏற்படுகிறது. அதுமாத்திரம் அல்ல அவர்களுடைய கோர்ட் நடப்பது இரண்டு மூன்று மைல்களுக்கு அப்பால் இருக்கிறது. ஆகையால் அவர்கள் இருக்கும் ஆபீசிலிருந்து அவர்கள் போவதென்றால் மிகவும் கஷ்டமாக இருக்கிறது. இதனால் அவர்கள் குறிப்பிட்ட நேரத்தில் வருவது கிடையாது. அதன் காரணமாக அட்வகேட்டுகள் எல்லாம் காத்துக்கொண்டிருக்கவேண்டிய நிலைமை ஏற்படுகிறது. ஆகவே சிவில் கோர்ட் காம்பவுண்டில் கோர்ட்டை வைத்தால் நலமாக இருக்கும் என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். அத்துடன் குறிப்பிட்ட நேரத்தில் ரெவின்யூ டிவிஷனல் ஆபீசர் கேஸை விசாரிக்க ஏற்பாடு செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

கடைசியாக ஸ்மால் லாண்ட்ஹோல்டரைப்பற்றி சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். என் பகுதியில் அதாவது நகரப்புறங்களில் விவசாயிகளின் பிரச்னை அதிகமாக இல்லாவிட்டாலும் சிறு நிலச்சுவான்தார்களின் பிரச்னை அதிகமாக இருக்கிறது. அப்படி இருக்கும் நிலையில் சீலிங் பில்லில் மூன்று எக்கருக்கு கொடுத்திருக்கிறார்கள். அதை 5 எக்கராக உயர்த்தவேண்டும். இதை மேலும் குறைக்கவேண்டாமென்று கேட்டுக்கொள்கிறேன். கம்யூனிஸ்ட் கட்சியில்கூட அவர்கள் கூட்டிய மாநாட்டில்கூட ஸ்மால் லாண்ட்ஹோல்டர்களுக்கு நிவாரணம் கொடுக்கவேண்டுமென்று ஒத்துக்கொண்டிருக்கிறார்கள். சிறு நிலச்சுவான்தார்களுக்கு சென்ற சாகுபடியின்போது ஒதுக்கப்பட்ட அளவை மேலும் குறைக்க வேண்டாமென்று சொல்லிக்கொண்டு என் வார்த்தைகளை முடித்துக்கொள்ளுகிறேன்.

**SRI S. M. ANNAMALAI :** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, சாகுபடியாளர் பாதுகாப்பு மசோதாவைக் குறித்து நான் பலதடவை இந்தச் சபையில் சொல்லிக்கொண்டு வருகிறேன். கனம் அமைச்சர் அவர்களும் கேட்டுக்கொண்டுதான் வருகிறார்கள். அதுவுமல்லாமல் பரிசீலனை செய்வதாக சொல்லிக்கொண்டுதான் வருகிறார்கள். ஆனால் உண்மையில் எந்த விதமான பரிகாரமும் இதுவரை செய்யவில்லை. பல சட்டங்கள் நிறைவேற்றப்பட்டன. இதற்காக பல குழுக்கள் போட்டு திருத்தங்கள் கொண்டு வந்திருக்கிறார்கள். இந்தச் சட்டங்கள் நல்ல முறையில் நடைபெறுகின்றனவா என்பதைப் பார்க்கும்பொழுது இந்தச் சட்டத்தில் சில கோளாறுகள் இருப்பதனால் இதை திருத்தவேண்டுமென்று திருத்தங்கள் கொண்டு

[Sri S. M. Annamalai] [24th August 1961

வருகிறார்கள். நாம் நடைமுறையில் பார்க்கும்பொழுது உண்மையிலேயே மிகவும் கஷ்டப்படும் ஏழை பாமர மக்களுக்கு எவ்வளவோ குறைகள் நீக்கப்படவேண்டியிருக்கிறது. அவைகள் நீக்கப்பட்டனவா என்று பார்த்தால் அப்படியேதான் இருக்கின்றன என்று சொல்லவேண்டும். அவைகளுக்குப் பரிகாரம் காணுவதற்குப் பல திருத்தங்கள் இந்தச் சட்டத்தில் செய்தாகவேண்டும். எனக்கு முன்பு பேசிய கனம் அங்கத்தினர் திரு. கல்யாணசுந்தரம் அவர்கள் சொன்னதுபோல் முச்சிலிகா அக்ரிமெண்டு இருக்கவேண்டும். ஆனால் இந்த அக்ரிமெண்ட் கிராமங்களில் செய்வது கிடையாது. அதற்குப் பதிலாக செக்ஷன் 447 கிரிமினல் சட்டத்தின் பிரிவின் கீழ் ஏழை விவசாயிகளின் மீது நடவடிக்கை எடுத்து வெளியேற்றுகிறார்கள். நான் பலதடவை இந்த சட்டமன்றத்திலே இதைப்பற்றி வற்புறுத்தியிருக்கிறேன். இந்தச் சட்டத்தின் மூலமாக பலவிதமான வேலைகள் ஏற்பட இருக்கின்றன என்று அதுவும் குறிப்பாக அக்ரிமெண்ட் விஷயத்தை எடுத்துக்கொண்டால் இதை மிகவும் வற்புறுத்தி இருக்கிறேன். ஏனென்றால் இந்தச் சட்டம் இருக்கிறதா இல்லையா என்று சில அதிகாரிகளுக்குக் கூட தெரியவில்லை. அதுவும் குறிப்பாக வட ஆற்காடு மாவட்டத்தில் சில தாசில்தார்களுக்கும், ரெவின்யூ டிவிஷனல் ஆபீசர்களுக்கும் இந்தச் சட்டத்தைப்பற்றி ஒன்றுமே தெரியவில்லை. இந்த மாதிரித்தான் பல மாவட்டங்களிலும் நிலைமை இருக்குமோ என்று சந்தேகப்படவேண்டியிருக்கிறது. குறிப்பாக சட்டமன்றத்தில் ஸ்ரீ ராமச்சந்திர ரெட்டியார் கேள்வி நேரத்தின்போது கனம் அமைச்சர் அவர்களை எத்தனை பேர் இந்தச் சட்டத்தின் பிரகாரம் வாரம் கட்டுகிறார்கள் என்று கேட்டதற்கு, நீங்கள் எந்த விகிதாச்சாரம் பிரகாரம் கட்டுகிறீர்கள் என்று கனம் அமைச்சர் அவர்கள் கேட்டார்கள். நான் சரிபாதி கட்டுகிறேன் என்று அவர்கள் சொன்னார்கள். இம்மாதிரி சட்டமன்ற உறுப்பினர்களாக இருக்கின்றவர்களுக்கே இந்தச் சட்டத்தின் நுணுக்கமெல்லாம் தெரியாமல் இருக்கும்பொழுது சாதாரணமாக விவசாயிகள், கிராமத்தில் உள்ள ஏழை விவசாயிகள் எந்த அளவு புரிந்துக்கொள்ள முடியும் என்பதை கனம் அமைச்சர் அவர்கள் யோசிக்க வேண்டும்.

அடுத்தபடியாக அடங்கலை எடுத்துக்கொண்டால் எந்தெந்த இடங்களில் சாகுபடி செய்கிறார்கள் என்ற விவரத்தை அந்த அடங்கலிலே காண்பிக்க வேண்டுமென்று சர்க்கார் உத்தரவு போட்டார்கள். ஆனால் அடங்கலிலே இம்மாதிரி குறிப்புகள் குறிப்பிடப்படவில்லை. அதற்குக் காரணம் அதற்கு வேண்டிய பாரங்கள் கிராமங்களுக்கு போய்ச் சேருவது கிடையாது. ஆகையால் சர்க்காரின் உத்திரவு பிறப்பித்திருந்துங்கூட பாரங்கள் இல்லாத காரணத்தினால் அடங்கலில் குறிப்பிடப்படவேண்டிய விஷயங்களை எல்லாம் குறிப்பிடப்படாமல் இருக்கின்றன. இந்தக் காரணத்தைக் காட்டி அங்கிருக்கும் அதிகாரிகள் தப்பித்துக்கொள்ளுகிறார்கள். இம்மாதிரி சட்டத்திலே பல ஓட்டைகள் இருக்கின்றன. இது எந்த அளவு பாமர ஏழை மக்களை பாதிக்கிறது என்பதை சற்று சிந்தித்துப் பார்க்கவேண்டும். எனக்குத் தோன்றுகிறது ஒரு வேளை நான் அடிப்பது போல் அடிக்கிறேன், நீ அழுவது போல் அழு என்பதுபோல் அரசாங்கமும் நாங்கள் சட்டங்கள் செய்வதுபோல் செய்கிறோம், நீங்கள் உங்கள் இஷ்டப் பிரகாரம் தகராறு செய்யுங்கள் என்பதுபோல்தான் இருக்கிறது. இதன் மூலமாக ஏழை விவசாயிகளுக்கு பாதுகாப்பு என்பதே இல்லை என்றுதான் சொல்லவேண்டும். இன்னும் நிலச்சுவான்தார்களுடைய மனம் மாறவில்லை. இம்மாதிரி நிலைமை வட ஆற்காடு மாவட்டத்தில் மாத்திரம் அல்ல மற்ற மாவட்டங்களிலும் இருக்கின்றன என்பதை புள்ளி விவரங்களோடு சொல்ல முடியும். வட ஆற்காடு மாவட்டத்தில் 1955–56-ல் களம்பூரில் நடந்த ஒரு பெரிய புரட்சி எல்லோருக்கும் தெரியும் என்று நம்புகிறேன். இந்தப் புரட்சிக்குக் காரணம் என்னவென்றால் விவசாயிகள் பத்து பதினைந்து ஆண்டுகள் தொடர்ந்து விவசாயம் செய்து வந்தும்கூட நிலச்சுவான்தார்கள் கிரிமினல் சட்ட 447-வது விதியின் கீழ் அவர்களை நிலத்தை விட்டு வெளியேறச் செய்தார்கள். மேலும் இந்தச் சட்டம் கூட 1955-ம் வருஷத்தில் தான் நிறைவேற்றப்பட்டது. இவ்வாறு நிறைவேற்றப்பட்டிருந்தும் கூட 447-வதுபிரிவின் கீழ் ஏழை விவசாயிகளை நிலத்திலிருந்து வெளியேற்று-

24th August 1961] [Sri S. M. Annamalai]

கிறார்கள். இதற்கெல்லாம் காரணம் என்னவென்றால் நிலச் சுவன்தாரர்களுக்கும் விவசாயிகளுக்கும் அக்ரிமெண்டு இல்லாததுதான். இதைத் தவிர பெரிய பெரிய நிலச்சுவான்தார்கள் பக்கத்தில்தான் அதிகாரிகளும் இருக்கிறார்கள்.

அதிகாரிகள், நிலச் சொந்தக்காரர்கள் பக்கத்தில்தான் இருக்கிறார்கள். எந்த தாசில்தார் அல்லது ஆர். டி. ஓ.-வை எடுத்துக்கொண்டாலும் பத்து பதினைந்து ஏக்கர் நிலங்களுக்கு குறைந்தவர்கள் இல்லை. ஆகவே, அப் படிப்பட்டவர்களிடம் இப்படிப்பட்ட கேஸ்கள் போகும்போது தங்கள் சொந்த நலனுக்குத் தகுந்தபடிதான் ஜட்ஜ்மெண்ட் வருமே தவிர பாமர மக்க ளுக்கு சாதகமான முறையில் வரக்கூடிய அளவிற்கு இந்தச் சட்டம் நல்ல முறையில் அமுல் நடத்தப்படவில்லை. இதில் பல திருத்தங்கள் செய்யப்பட வேண்டும். அமைச்சர் அவர்கள் சொல்லலாம், நில உச்ச வரம்பு மசோதா வருகிறது, அது வந்த பிறகு இந்த மாநிலத்தில் அது அமுல் நடப்பதைப் பார்த்து பின் என்னென்ன திருத்தங்கள் செய்யலாம் என்று பார்க்கலாம் என்று சொல்வார்கள். அதில் பல குறைபாடுகள் இருக்கின்றன. அதைப் பார்த்து இதைப் பின்னால் செய்யலாம் என்று சொல்வதைவிட இந்தச் சட்டம் எப்படி அமுல் நடத்தப்பட்டு வருகிறது, என்னென்ன வகையில் திருத்தங்கள் செய்யப்படவேண்டும் என்று அறிந்து தகுந்த நடவடிக்கைகள் எடுக்க ஒரு செலக்ட் கமிட்டி நியமித்து, அதேசமயத்தில் தயவு தாட்சண்யம் இன்றி அதிகாரிகள் ரிப்போர்ட்கள் தயார் செய்து இதில் எவ்வளவு வழக்குகள் வந்தன, எந்தெந்த நிலங்களை யார் யார் எப்பொழுது எப்பொழுது பயிர் செய்து வந்தார்கள் என்பது போன்ற புள்ளி விவரங்களை, மற்ற இலா காக்கள் மற்ற சட்டங்களில் சேகரிப்பது போன்று இந்த சட்டத்திற்கும் அது போல் தயவுசெய்து எடுக்கவேண்டும். மக்களின் நன்மைக்காக இச்சட்டத்தைப் போட்டிருக்கிறோம் என்று சொல்லி ஒரு " ஐ வாஷ்-ஷாக ", ஒரு கண் துடைப்பாக சட்டங்கள் போடப்பட்டிருக்கின்றன என்ற எண்ணம் இருக்குமானால் இதை இப்படியே விட்டு விடலாம். ப்ளானிங் கமிஷன் சொல்வது போல் 75—25 என்று வாரத்தை மூன்றுவது திட்டத்தில் உயர்த்தவேண்டுமென்று சொல்லப்பட்டிருக்கிறது. அதையும் பார்த்தேன். சர்க்காருக்கு நல்லெண்ணம் இருக்குமேயானால் இந்தச் சட்டத்தை தீர ஆலோசித்து, ஆராய்ச்சி செய்து முடிவு எடுக்க இந்த சாகுபடியாளர் பாது காப்புச் சட்டத்தை செலக்ட் கமிட்டிக்கு விட்டு 10, 15 நாட்களுக்குள், இரண்டு மூன்று தினங்கள் உட்கார்ந்து இதில் சில திருத்தங்கள் கொண்டு வரலாம். ஆகவே, செலக்ட் கமிட்டிக்கு இதை அனுப்பவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். 10-30 a.m.

* SRI R. SRINIVASA IYER : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, ஒரு சிறிய திருத்தச் சட்டத்திற்கு இவ்வளவு விவாதம் தேவையா ? இந்த பில்லை செலக்ட் கமிட்டிக்கு விடவேண்டுமென்பதற்கு காரணம் சொல்லப்பட்டிருக்கிறதே அதுவே இந்த மசோதாவுக்கு புறம்பான தாகும். இதை அவைத் தலைவர் அவர்கள் கவனிக்கவேண்டும். இதில் என்ன சொல்லப்பட்டிருக்கிறதென்றால், That the Bill be referred to a Select Committee consising of . . . members of the Assembly with instruction that the report be presented before 31st August 1961, with a view to examining what provisions of the main Act require amendments. அது, இந்த பில்லிற்கே புறம்பானது. சட்ட சபை ரூல்ஸ்படி அதை டிஸ்கஸ் செய்யவே கூடாது. இந்த டெனன்ட்ஸ் ப்ரொட்டக்ஷன் ஆக்ட் 26-9-61-ல் எக்ஸ்பயராகிறது. ஆகவே, இந்த ஆக்ட் XXV of 1955 இரண்டு வருடங்களுக்கு நீடிக்கவேண்டுமென்று இது கொண்டுவரப்பட்டிருக்கிறது. சாகுபடி செய்கிற குடியானவர்களை அப்புறப்படுத்தக்கூடாது என்பதில் ஒரு சாராருக்கு மட்டும்தான் அக்கறை உள்ளது போலவும், மற்றவர்களுக்கு அக்கறை இல்லாதது போலவும், சர்க்காருக்கு அக்கறையில்லாதது போலவும் காங்கிரஸ் கட்சியினருக்கு அதில் அக்கறையில்லாதது போலவும் பேசுவது நியாயமில்லாத வாதமாகும். குடியானவர்களும், லாண்ட் ஓனர்களும் நல்லவர்களாயிருந்து 30, 40 வருடங்களுக்கும் மேலாகவே சாகுபடி செய்து கொண்டு இருப்பவர்களை, அவர்களிடையே இருக்கும் நல்ல சுமுகமான

உறவை கெடுக்க சிலர் முயற்சித்தாலும் அந்த உறவு போகமாட்டேன் என்கிறது. எதற்கெடுத்தாலும் அதிகாரிகளை குறை கூறுவது சரியல்ல. அதிகாரிகள் பத்து அல்லது பதினைந்து ஏக்கர் நிலம் வைத்துக்கொண்டிருக்கிறார்கள் என்று சொன்னார்கள். சர்க்கார் அதிகாரிகள் நிலம் வைத்துக் கொள்ளக் கூடாதா ? அப்படியானால் அவர்கள் நிலத்தை பறித்துவிட சட்டம் கொண்டு வரலாமே. இப்பொழுது பேர் ரெண்ட் ஆக்ட் (**Fair Rent Act** ) அமுலில் இருக்கிறது. தஞ்சை ஜில்லாவிலும் இருக்கிறது, 60—40 என்று. நூற்றுக்கு 30 வாரம் சாகுபடிதாரனுக்கு கொடுத்துக் கொண்டிருந்தது போக இன்று 60 பர்சன்ட் சாகுபடிதாரனுக்கு கொடுக்கிறார்கள். 1952-ல் இதுபற்றிய கிளர்ச்சி அங்கு எழுந்தது. அதை Act XIV of 1952-படி ஒருவாறு ஒழுங்குபடுத்தப்பட்டது. இப்பொழுது வாரம் வசூல் செய்வதில் எவ்வளவு கேஸ்கள் பதியப்பட்டன, எவ்வளவு கேஸ்கள் இன்று பாக்கியிருக்கின்றன என்று பார்க்கவேண்டும். லாண்ட் ஸீலிங் பில் செலக்ட் கமிட்டி, தென் ஆற்காடு, தஞ்சாவூர் போன்ற இடங்களுக்கு சென்றிருந்தபோது கனம் அண்ணாமலை அவர்கள், கனம் கல்யாணசுந்தரம் அவர்கள் போன்றவர்கள் புள்ளி விவரங்கள் கேட்டார்கள். எல்லா ஜில்லாக்களுக்கும் இதுபற்றிய புள்ளி விவரம் வேண்டுமென்று நான் கேட்டேன். 1955-லிருந்து 1960 வரையில் வருடம் ஒன்றுக்கு ஜில்லா வாரியாக 12 அல்லது 15 எவிக்ஷன் கேஸ்கள் தான் நடக்கிறது. கோர்ட் மூலம் என்று புள்ளி விவரம் சர்க்கார் மூலம் கிடைத்தது. செக்ஷன் 447, ஐ. பி. சி.-படி டிரஸ்பாஸ் பேரில் கேஸ்கள் நடத்துகிறார்கள். அது குறித்து மாஜிஸ்ட்ரேட் விசாரணை செய்து தீர்ப்பளித்து தண்டித்ததால் பல அப்பீல்கள் ஹைகோர்ட் வரை இருக்கிறது. குற்றம் சாட்டப்பட்டிருக்கிற வழக்குகள் பொய்யா அல்லது சரியா என்று பார்க்க நீதிபதிகளும் அதிகாரிகளும் நியமிக்கப்பட்டிருக்கின்றனர். களத்துமேட்டில் கண்டு முதல் போட்டு 60-40 வாரம் பிரித்துக் கொள்ளும் வழக்கமுண்டு. இந்த **Fair rent** ஏற்பட்டது சட்டம் சரி. ஆனால் அதில் 40 சத விகிதம் நிலச்சுவான்தாருக்கு களத்துமேட்டில் பிரித்து கொடுக்கவேண்டுமென்று ஷை சட்டத்தில் இல்லை. ஆனதால் சாகுபடிதார்களை வாரம் கொடுக்காமல் அறுத்துக்கொண்டு போகும்படி சிலர் தூண்டிவிடுகிறார்கள். அதற்கு கேஸ் போட்டால், பட்டம் பெற்ற வக்கீல்களல்லாத சிலர்கள் பவர் வாங்கிக்கொண்டு வக்கீல்களுக்கு பதிலாக ஆஜராகிறார்கள். நம்பர் முடிந்து தீர்ப்பாகும் போது பணம் கொடுக்காதது உண்மையென்று தீர்ப்பு சொன்னாலும் அவர்களுக்கு ஒரு மாதம் டயம் கொடுக்க சட்டம் இருக்கிறது. அதை நீடித்துக் கொண்டு போக சட்டத்தில் இடமிருக்கிறது. அநேக கேஸ்களுக்கு பாக்கியை செலுத்த டயம் கொடுக்கப்பட்டிருக்கின்றன. முதல் அறுவடைக்கு கொடுக்க வேண்டிய பணத்தை கொடுத்து முடிப்பதற்குள் அடுத்த அறுவடை வந்து விடுகிறது. அதை விற்று பணம் கொடுக்கலாம். ஆக பல நிலச்சுவான்தார்களுக்கு சேரவேண்டிய நெல் கிடைப்பதில்லை. அவர்களுக்கு கொடுக்க வேண்டிய நெல்லை அறுத்துக்கொண்டு போய்விட்டு விடுகிறார்கள். நிலச்சுவான்தாரன் நெல் விலைக்கு வாங்கி சாப்பிட வேண்டியிருக்கிறது. ஆகவே " சர்க்காருக்கு நல்லெண்ணம் இல்லை, நல்ல எண்ணத்தோடு இந்தச் சட்டத்தை அமுல் நடத்தவில்லை, அதிகாரிகளும் சரியாக நடப்பதில்லை " என்றெல்லாம் சில அங்கத்தினர்கள் சொல்வது நியாயமல்ல. கர்ணங்கள் கணக்கில் எழுதுவதில் எவ்வளவோ போர்ஜரிகள் கண்டுபிடிக்கப்பட்டிருக்கின்றன. வேணுமென்றே பொய்யாக சாகுபடிதாரன் என்ற ஒரு பெயரை எழுதிவிடுகிறார்கள். எக்ரிமெண்ட் பற்றி சொல்லும்போது, நூற்றுக்கணக்கில் எக்ரிமெண்ட்கள் தாலூகா ஆபீஸில் பைல் செய்யப்பட்டிருக்கின்றன. இதுபற்றி எல்லா புள்ளி விவரங்களும் வேண்டுமென்றால், வருடா வருடம் இதுபற்றி **Questions** இந்த சபையில் போட்டிருக்கலாமே. **Particulars** கேட்டு கிடைக்காவிட்டால் பின்னர் குறை கூறலாம். ஜில்லா ஒன்றுக்கு வருஷம் 1-க்கு சராசரி 12 கேஸ்கள் வருகின்றன. அநேக கேஸ்களை ரெண்ட் கோர்ட் ஆபீஸர்களே சமரசமாக தீர்த்து விடுகிறார்கள். ஹைகோர்ட்டிற்கு இதுபற்றிய கேஸ்கள் வந்து அவர்கள் தீர்ப்பும் கொடுக்கிறார்கள். அப்படித் தீர்ப்பு வரும்போது அது சிலருக்கு சாதகமாகயில்லையென்றால் தீர்ப்பு எங்களுக்கு விரோதமாக இருக்கிறது என்கிறார்கள். நீதியே எங்களுக்கு விரோதமாகயிருக்கிறது என்கிறார்கள். இந்த மசோ

24th August 1961] [Sri R. Srinivasa Iyer]

தாவிற்காக ஒரு செலக்ட் கமிட்டி போட்டு பத்து நாளில் என்ன செய்ய முடியும்? இரண்டு வருடம் நீடிக்கவேண்டுமா இல்லையா என்பதுதான் பாயிண்ட். அதே நேரத்தில் இண்டஸ்ட்ரியல் டிஸ்பியூட் ஆக்டுபடிக்குள்ள விதிகளெல்லாம் இதற்கும் கொண்டு வர வேண்டும் என்று சொல்லப் பட்டது. தயவு செய்து விவசாயத்தில் இதை புகுத்த வேண்டாம் என்று கேட்டுக்கொள்கிறேன். ஒவ்வொரு இடத்திலும் மிராசுதாரும் குடியான வனும் எவ்வளவோ நல்ல முறையில் சுமுகமாக நல்ல உறவுடன் இருந்து கொண்டிருக்கிறார்கள். குடியானவனுக்கு அவசியப்படுகின்ற நேரத்தில் எல்லாம் 10 அல்லது 20 ரூபாய் எந்த விதமான வட்டியும் இல்லாமல் கடன் கொடுத்து வாங்குகிறார்கள். அவர்கள் பின்னால் அறுவடையின்போது கொடுக்கிறார்கள். ஒரு அறுவடையில் இல்லை என்றாலும் அடுத்த அறுவடையின் போது கொடுக்கிறார்கள். இம்மாதிரி ஒற்றுமையாக இருக் கிறவர்களிடம் எதையாவது சொல்லி அவர்களை பிரித்து, எந்த வகையிலும் உணவு உற்பத்திக்கும், சாகுபடிக்கும் இடைஞ்சல் உண்டாக்கவேண்டும் என்ற நோக்கத்துடன் செயல்படுவது நல்லதல்ல. இவ்விதம் எதையாவது நடத்திக்கொண்டிருந்தால் '**driving the wedge between the landholder and the tenant rather too far**' அவ்வாறுதான் முடியும். அதோடு இனிமேல் வரப்போகின்ற நிலச் சீர்திருத்த பில்லில் பல புதிய ஷரத்துக்கள் எல்லாம் வரப்போகின்றன. ஆகவேதான் அந்த ஆக்ட் வருவது வரை, இந்தச் சட்டம் இன்னும் இரண்டு வருட காலத்திற்கு இருக்க வேண்டும் என்று சர்க்கார் கேட்டிருக்கிறது. இது செலக்ட் கமிட்டிக்கு போக வேண்டிய அவசியமில்லை. இதற்காக அதிகாரிகளை குறை கூற வேண்டிய அவசியமில்லை. சர்க்காரைக் குறை கூற வேண்டிய அவசியமில்லை. மசோதா இப்போது இருப்பது போலவே இருக்கலாம் என்று கூறி என் வார்த்தைகளை முடித்துக் கொள்கிறேன்.

* THE HON. SRI M. A. MANICKAVELU: ஸார், இந்த மசோதா வினுடைய கருத்து இதை இன்னும் இரண்டு வருடங்களுக்கு நீடித் திருக்க வேண்டும் என்பதுதான். இதோடு நில சீர்திருத்த மசோதாவைப் பற்றி இன்னும் சில நாட்களில் விவாதிக்கப் போகிறோம். இதை ஒட்டித் தான் இந்த மசோதா கொண்டு வந்திருக்கிறோம். இந்த நேரத்தில் இங்கு பல விஷயங்கள் பேசப்பட்டன. முதாலாவது அமைச்சர் அவர் களைப்பற்றி பேசினார்கள். அமைச்சருக்கு என்று எந்தவித விசித்திர மான சித்தாந்தமும் கிடையாது. அமைச்சருக்கு இருக்கின்ற சித்தாந்தம் சட்ட சம்பந்தமான சித்தாந்தம், நியாயம் சம்பந்தமான சித்தாந்தம், இவைகள்தான் இருக்கும். வேறு எந்த விதமான சித்தாந்தமும் இருக்க முடியாது. மேலும் இந்த சட்டத்தின்படி அனேக விவசாயிகள் வெளியேற்றப்பட்டனர் என்று சொன்னார்கள். 1952-வது வருடத்திற்கு முன்னால் எப்படி இருந்தது என்பதை நாம் எல்லோரும் அறிந்திருக் கிறோம். குறிப்பாக தஞ்சாவூர் ஜில்லாவில் தஞ்சாவூர் பண்ணையாள் சட்டம், கல்டிவேடிங் டெனன்ட் ப்ரொடெக்ஷன் ஆக்ட், ஃபேர் ரென்ட் ஆக்ட் முதலிய மூன்று சட்டங்களை நாம் விவசாயத்துறையில் நிறைவேற்றின பின்னால் அதில் ஒருவிதமான அமைதி ஏற்பட்டது. நல்லபடியாகவும் இருந்து கொண்டிருந்தது. இவ்விதம் நல்லபடியாக நடப்பதற்கும் சிலர் சம்மதிப்பதில்லை. ஏதாவது விஷயங்களை கிளப்பிக் கொண்டேயிருப்பார் கள். சில இடங்களில் நிலச்சுவான்தார்களும் குடியானவர்களும் தாய் தகப்பன் போல் ஒற்றுமையாக நடந்து கொண்டிருந்த, அந்த இடங் களில் எல்லாம் புதுமாதிரியான இயக்கம் கொண்டு வந்து பல இடைஞ் சல்கள் ஏற்படுத்தியதன் காரணமாக சட்டம் செய்ய வேண்டிய நிர்ப் பந்தம் ஏற்பட்டது. சட்டம் ஏற்பட்டதின் பின்னால் பெருவாரியான விவ சாயிகள் பாதுகாக்கப்பட்டிருக்கிறார்கள். சில இடங்களில் விவசாயிகள் வெளியேற்றப்பட்டிருக்கலாம். இல்லை என்று சொல்லவில்லை, அதே போன்றுதான் சட்டத்தில் குறைபாடுகளே இல்லை என்று நான் சொல்ல வரவில்லை. சட்டத்தை நடைமுறையில் கொண்டு வரும் போது பல விதமான சிக்கல்கள் ஏற்படலாம். இதன் காரணமாக சில இடங்களில் எக்ஸப்ஷனாக சில கேஸ்கள் இருக்கும். அதை வைத்துக் கொண்டு ஜெனரலைஸ்—பண்ணி சொல்லுவது சரியல்ல. பொதுவாக இந்த மூன்று

சட்டங்கள் கொண்டு வந்ததின் காரணமாக இப்போது பத்து வருடங்களாக நிலைமை சுமுகமாக இருந்து கொண்டிருக்கிறது. இந்த நிலைமையில் இந்தச் சட்டத்தை இன்னும் இரண்டு வருடங்கள் நீடிக்க வேண்டியிருக்கிறது. காரணம் என்னவென்றால், காம்ப்ரஹென்ஸிவாக—பரவலாக பல ஷரத்துக்களை கொண்ட நிலச் சீர்திருத்த மசோதா கொண்டு வந்து அதை செலக்ட் கமிட்டிக்கு அனுப்பி, அதை மிகவும் விரிவாக பரிசீலனை செய்து, பலரிடமிருந்தும் எவிடன்ஸ்கள் எல்லாம் கேட்டு அதன்படி சட்டத்தைத் திருத்தி அமைத்து இப்போது சமர்ப்பிக்கப்பட்டிருக்கிறது. இன்னும் சில நாட்களில் அதைப்பற்றி விவாதிக்கப்போகிறோம். விவசாயிகளுக்கு அதில் பல உரிமைகள் கொடுக்கப்போகிறோம். டெனன்ட்டாக இருக்கிறவர்களுக்கு பல உரிமைகள் கொடுப்பதற்கு ஷரத்துக்கள் எல்லாம் சேர்க்கப்பட்டிருக்கின்றன. ஆனால் இதில் ஒரு விஷயம் என்னவென்றால், நாட்டில் நிலம் இல்லாதவர்களுக்கு எல்லாம் நம்மால் நிலத்தை கொடுத்துவிட முடியாது. எல்லோரும் நிலம் வேண்டும் என்றுதான் ஆசைப்படுகிறார்கள். அதற்குத் தகுந்தவாறு இந்தியாவிலோ அல்லது சென்னை ராஜ்யத்திலோ இல்லை. ஒரு குறிப்பிட்ட அளவுக்குத்தான் நிலம் இருக்கிறது. அதைத்தான் நியாயமான முறையில் பகிர்ந்து கொடுக்க முடியும். காரணம் நம் நாட்டில் ஜனத் தொகை அதிகமாக இருந்து கொண்டிருக்கிறது. நிலத்தின் மீது எல்லோருக்கும் ஆசை இருக்கிறது. நிலத்தை நம்பித்தான் பெருவாரியான விவசாயிகள் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். இதனால் நிலத்திற்கு பிரஷர் அதிகமாக இருந்து கொண்டிருக்கிறது. சிலர்கூட கேட்கிறார்கள், ஏன் இதற்கு மட்டும் உச்ச வரம்பு கொண்டு வரப்பட்டிருக்கிறது. மற்ற இனங்களுக்கு ஏன் உச்ச வரம்பு கொண்டு வரவில்லை என்று கேட்கிறார்கள். நிலத்தில்தான் அதிக பிரஷராக இருக்கிறது. அதனால்தான் நிலத்திற்கு முதாலாவது உச்ச வரம்பு கொண்டுவரப்பட்டிருக்கிறது. இது இந்த நாட்டில் மட்டும் அல்ல, மற்ற நாடுகளிலும் அப்படித்தான் இதில் எல்லா பகுதியினரையும் திருப்தி செய்ய முடியாது. இங்குகூட ஒரு சம்பவம் நடந்தது, நேற்றுத்தான். என்று நினைக்கிறேன். ஒரு பெரிய கோஷம் நமது ஆபீஸுக்கு வெளியே கேட்டது. அதாவது நிலச் சீர்த்திருத்தச் சட்டத்தில் 30 ஏக்கர் என்று வைத்திருப்பது அதிகம். அதைக் குறைக்க வேண்டும் என்று கோஷமிட்டார்கள். இவ்விதம் ஒரு சிலருக்கு வேறு குறைகள் இருக்கலாம். இதற்கு அரசியல் கண்ணோட்டம் ஒரு காரணமாகவும் இருக்கலாம். ஆனால் அரசாங்கம் அப்படியிருக்க முடியாது. எல்லா மக்களுக்கும் பொதுவானதாகத்தான் இருக்க முடியும். பொதுவான முறையில் நியாயமானமுறையில் எப்படி அனுகூலத்தை செய்து கொடுக்க முடியுமோ அந்த விதத்தில் தான் அனுகூலத்தை செய்து கொடுக்க முடியும். அதல்லாமல் ஒரே கோணத்திலிருந்து மட்டும் கவனத்தை செலுத்திக் கொண்டிருக்க முடியாது. எனக்கு எதிரில் இருக்கின்ற கனம் அங்கத்தினர் அவர்களுக்கு எப்போதுமே தனியாக ஏதாவது கருத்துக்கள் இருக்கும். யார் மீதாவது ஃபோபியா இருந்து கொண்டிருக்கும். அரசாங்கத்தின் மீது ஃபோபியா, பணக்காரர்கள் மீது ஃபோபியா, அதற்கு நம்மால் ஒன்றும் செய்ய முடியாது. அவர்களுக்கு அது ஊறிப்போய் விட்டது. அவர்கள் சேர்ந்திருக்கின்ற இயக்கத்தில் ஊறி, ஊறி இவ்விதமான ஒரு ஃபோபியா ஏற்பட்டிருக்கிறது. இதை திடீரென்று மாற்றி விட முடியாது. நான் ஒரு நிமிஷத்தில் அதற்குப் பதில் சொல்லி மாற்றி விட முடியாது. அது அவரோடு ஊறிப்போய் இருக்கிறது. அது நன்றாக ஏறி பின்னால் தான் அடங்கும். சூழ்நிலைக்குத் தக்கவாறு பின்னால் அடங்கிவிடும். ஆகவே ஒரு இடத்தில் நடந்ததை மட்டும் உதாரணமாக எடுத்துக் கொண்டு பொதுவாக செல்லுவது சரியல்ல. அதற்காக சட்டத்தில் குறைபாடுகளே இல்லை என்று சொல்ல நான் முன் வரவில்லை. குறைகளை எல்லாம் நிவர்த்தி செய்ய வேண்டும் என்று பல திருத்தங்களை கொண்டு வருகிறோம். அதே நேரத்தில் இம்மாதிரியான சட்டத்தை மீறுவதற்கும் வழி கண்டுபிடித்துவிடுகிறார்கள். அதற்கான வாய்ப்பும் ஏற்பட்டுவிடுகிறது. சாதாரணமாக 100 ரூபாய்க்கு 6-க்கு மேல் வட்டி வாங்கக் கூடாது என்று சட்டம் போடுகிறோம். அவ்விதம் எத்தனை பேர்கள் வாங்குகிறார்கள்? [illegible] கழித்து விட்டுத்தான் பணத்தைக் கொடுக்கின்றார்கள் முதலில்.

24th August 1961] [Sri M. A. Manickavelu]

இதற்கு சட்டம் என்ன செய்யும்? ஆகவே இதை வைத்துக் கொண்டு, அரசாங்கத்திற்கு இருதயமில்லை என்றெல்லாம் சொல்லுவது சரியல்ல. அரசாங்கத்திற்கும் எல்லோருக்கும் இருக்கின்ற இரத்தம்தான் இருக்கிறது. நல்ல எண்ணத்தோடுதான் சர்க்கார் பல சட்டங்களைக் செய்கின்றன. அந்த முறையில் விவசாயிகளுக்கு என்று மூன்று சட்டங்களைக் கொண்டு வந்தோம். அதன் காரணமாக எத்தனையோ விவசாயிகள் பாதுகாக்கப்பட்டிருக்கிறார்கள். எனக்குத் தெரியும் சில இடங்களில், 100-க்கு 20 தான் குடியானவர்களுக்குக் கொடுத்துக் கொண்டிருந்தார்கள். அதெல்லாம் இப்பொது மாறி 60 சாகுபடியாளர்களுக்கும், 40 சொந்தக்காரர்களுக்கும் கொடுக்க சட்டம் வந்திருக்கிறது. இம்மாதிரியான சட்டங்களை கொண்டு வரும்போது நிலச் சொந்தக்காரர்கள் சொல்லுகிறார்கள். இந்தக் காங்கிரஸ்காரர்களுக்கு வேலையே இது தானா என்று சொலுல்லிக்கொண்டிருக்கிறார்கள். அதே நேரத்தில் சிலர் நன்றியில்லாமல் வேறு விதத்திலும் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள். . . .(குறுக்கீடு) ஆகவே இந்த மசோதாவைப் பொறுத்தவரை இது ஒரு சிறிய பிரச்னை. லாண்ட் ரிபார்ம் பில் வருவது வரையிலும், இந்தச் சட்டம் நீடித்திருக்க வேண்டும் என்பதற்காக இதை இன்னும் இரண்டு வருடத்திற்கு நீடித்திருக்க கேட்கப்பட்டிருக்கிறது. சாதாரணமாக ஒரு வருடம் என்று கேட்பது வழக்கம். ஜாஸ்தியாக இருந்தால் நல்லது என்ற அளவில்தான் இவ்விதம் கேட்கப்பட்டிருக்கிறது. ஆகவே இதை பொறுக்கு கமிட்டிக்கு அனுப்ப வேண்டிய அவசியமில்லை, காம்ப்ரஹன்ஸிவ் பில்லாக வருகின்ற லாண்ட் ஸீலிங் பில் விவாதத்திற்கு வரும் போது மற்ற விஷயங்களை எல்லாம் கவனித்து கொள்ளலாம் என்று தெரிவித்துக் கொண்டு என் வார்த்தைகளை முடித்துக் கொள்கிறேன்.

DEPUTY SPEAKER: The amendment moved by the hon. Member Sri Kalyanasundaram is not specific and he wants that the Bill be referred to a Select Committee to examine the main Act and I think the hon. Member Sri Srinivasa Iyer's objection is also perfectly correct. In this connection, I want to draw the attention of the House that in the Lok Sabha on the 2nd August 1955, during the discussion on the motion to refer the Code of Civil Procedure (Amendment) Bill to a Joint Committee, a member (Shri M. L. Agarwal) moved an amendment instructing the Joint Committee to go into the entire Code and recommend amendments to any other section not covered by the Bill. The Deputy Speaker, thereupon, said that the instructions to the Joint Committee should be specific and that to ask the Joint Committee to go into the whole legislation would be trying to convert an amending Bill into a consolidating or a revising Bill. So, if the hon. Member wants to press his amendment, I would have to give a ruling.

SRI M. KALYANASUNDARAM: Before the Chair gives a ruling I would submit that the ruling of the Lok Sabha deals with a Code. When moving an amendment with regard to a Code which contains several aspects, of course, it should be specific. But this Bill is a specific Bill and it deals with one aspect, viz., protection of cultivating tenants and that is the only purpose for which the main Act was passed and I cannot be more specific. Therefore, I did not care to refer to the respective clauses which require reconsideration. Anyhow I will leave it to the Chair.

DEPUTY SPEAKER: I do not agree with what has been stated by the hon. Member Sri Kalyanasundaram and so I rule his amendment out of order.

Now I will put the motion to the vote of the House.

The question is—

'That the Madras Cultivating Tenants Protection (Amendment) Bill, 1961, be taken into consideration.'

The motion was put and carried and the Bill was taken into consideration.

*Clause 2.*

DEPUTY SPEAKER : The question is—

'That clause 2 do stand part of the Bill.'

SRI M. KALYANASUNDARAM : Sir, I move the following amendment :—

'In the clause, *for* the word "eight", *substitute* the word "ten".'

SRI A. GOVINDASAMY : Sir, I second the amendment.

DEPUTY SPEAKER : The clause and the amendment are before the House for discussion.

**SRI M. KALYANASUNDARAM :** ஸார், கூட இரண்டு ஆண்டுகளுக்கு இதை நீடிக்க வேண்டும் என்பது தான் எனது திருத்தத்தின் நோக்கம். ஏனென்றால் நில உடைமைக்கு உச்ச வரம்பு கட்டும் மசோதா சட்டமாக்கப் பட்டு, அமுலுக்கு வந்து, அதன் விளைவுகள் எப்படி இருக்கப் போகிறது என்பது அடுத்த பொதுத் தேர்தலுக்குப் பிறகு பார்க்கும் போது தெரியும். இப்போது நீடிப்பதை இன்னும் இரண்டு வருஷம் சேர்த்துவிடலாம். இடையில் இந்த மசோதாவிற்கு அவசியமில்லை என்று தோன்றினால் அப்போது இதை ரத்து செய்வதற்கு அதிகாரம் இருக்கிறது. நீடிப்பதற்காக அடிக்கடி சட்டம் கொண்டு வருவதற்கு பதில்—இரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை மசோதாவைக் கொண்டு வருவதற்கு பதில்—இப்படியே நீடிக்கலாம் என்று தான் நான் சொல்லுகிறேன். இந்தத் திருத்தம் எந்த விதமான இடைஞ்சலும் இல்லாத திருத்தம். இப்போது இருக்கக் கூடிய சட்டத்தில் குறைபாடுகள் இருந்தாலும் அந்தக் குறைபாடுகளுடன் தான் நீடிக்கவேண்டும் என்பது திருத்தம். இருக்கக் கூடிய குறைபாடுகளைப் போக்க வேண்டும் என்று கொடுத்த திருத்தம் இந்தச் சபையிலே ஏற்றுக் கொள்ளப்படவில்லை—அமைச்சர் அவர்களால் ஒத்துக்கொள்ளப்படவில்லை. பின்னால் தீர்க்கமாகப் பரிசீலனை செய்ய சந்தர்ப்பம் இருக்க வேண்டும் என்றுதான் நான் திருத்தத்தைக் கொடுத்திருக்கிறேன். அமைச்சர் அவர்கள் சில விஷயங்களை சபையின் கவனத்திற்கு கொண்டு வந்தார்கள். அவருக்கே உரிய மேலெழுந்தவாரியாகப் பேசும் சாதுர்யத்தை உபயோகித்து நன்றி கெட்டவர்கள் என்று—நன்றியுடையவர்கள் யார் என்றால் அவருடைய எண்ணத்தில் பணக்காரர்கள் தான். வாஸ்தவம்; ஆனால் இந்த சட்டத்திலே அவர்களுக்கு இரண்டு பக்கத்திலும் இடி ; யார் பேரில் அவருக்கு உள்ள கோபத்தைக் காட்டுவது என்று பார்த்தார்கள், அதை உடனே எங்கள் பேரில் காட்டிவிட்டார்கள். குறிப்பிட்ட வயதிற்கு மேல் ஆகிவிட்டால் செல்லப்பிள்ளை ஆகி விடுவது வழக்கம். இந்த மந்திரி சபையில் வயதில் பெரியவர் இவர் தான் . . . . .

DEPUTY SPEAKER : The hon. Member should not make any insinuation.

**SRI M. KALYANASUNDARAM :** வயதில் பெரியவர்களாக இருந்தால் கொஞ்சம் 'இண்டலிஜென்ஸ்' இருக்கும்.

24th August 1961]

DEPUTY SPEAKER : The hon. Member should speak on the amendment and not refer to other matters.

**Sri M. KALYANASUNDARAM :** ஆகையால், அந்தத் திருத்தங்களை ஒத்துக் கொள்ளாவிட்டாலும், இந்தத் திருத்தத்தையாவது ஒத்துக்கொண்டு, இந்தச் சட்டத்தை நீடிப்பதற்குள்ள ஒரு சந்தர்ப்பத்தை உண்டாக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

**The Hon. Sri M. A. MANICKAVELU :** இந்த மாதிரி நீடிக்கும் மசோதாவை ஒரு வருஷத்திற்குத்தான் கொண்டுவருவது வழக்கம். இப்போது தான் இரண்டு வருஷமாக ஆக்கியிருக்கிறோம். இரண்டு வருஷம் போதுமானதாக இருக்கும். இதை இன்னும் அதிகமாக்கினால் சில பேர்களுக்கு தப்பு அபிப்பிராயம் ஏற்பட இடம் கொடுக்கும். இதை நான்கு வருஷம் போட்டுவிட்டார்கள். ஆகையால் நிலச் சீர்திருத்த மசோதாவையே சீக்கிரம் அமுலுக்குக் கொண்டுவரப்போவதில்லையோ என்ற அபிப்பிராயத்திற்கு இடம் கொடுக்கும். இரண்டு வருஷம் என்பது போதுமான கால அளவு. ஆகையால் இந்தத் திருத்தத்தை ஒத்துக் கொள்வதற்கில்லை என்று தெரிவித்துக் கொள்கிறேன்.

DEPUTY SPEAKER : Is the hon. Member, Sri Kalyanasundaram, pressing his amendment?

Sri M. KALYANASUNDARAM : Sir, I press my amendment.

DEPUTY SPEAKER : The question is—

'In the clause, *for* the word " eight ", *substitute* the word " ten ".'

The amendment was put and declared lost.

Sri M. Kalyanasundaram demanded a poll. The division bell was rung.

The amendment was again put and lost.

Clause 2 was put and carried.

Clause 1 and the Preamble were put and carried.

The Hon. Sri M. A. MANICKAVELU : Sir, I move—

" That the Madras Cultivating Tenants Protection (Amendment) Bill, 1961, be passed"

DEPUTY SPEAKER : Motion moved—

" That the Madras Cultivating Tenants Protection (Amendment) Bill, 1961, be passed." 11-00 a.m.

**Sri M. KALYANASUNDARAM :** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்தச் சட்டத்தை இரண்டு வருஷத்திற்கு நீடித்துவிட்டால் மட்டும் போதாது. நான் கூறியுள்ள குறைபாடுகளையெல்லாம் தீர்க்கமாக பரிசீலனை செய்து விட்டு, என் மீது குறை சொன்னால் போதும். ஏதோ **10, 12** கேஸ்கள் தான் இதிலே இருக்கிறது என்று சொல்வதெல்லாம் உண்மைக்குப் புறம்பானது. ஹை கோர்ட் முன்னாலே ரிவிஷனிலே ஆயிரக்கணக்கான கேஸ்கள் இருக்கிறது. அதைத் தவிர இரண்டு வருஷத்திற்கு மேல் பெண்டிங்காக உள்ள கேஸ்கள் நூற்றுக்கணக்கிலே டிஸ்போஸ் ஆகாமல் இருக்கிறது. அதைத் தெரிந்து சொல்கிறேனே தவிர, விசாரித்து அறிந்து சொல்கிறேனே தவிர, ஏதோ கற்பனையாகச் சொல்லவில்லை. இவைகள் சட்டப்படி எடுக்கப்பட்டுள்ள நடவடிக்கைகள். இதைத் தவிர சுமுகமான முறையிலே தீர்க்கப்பட்டவைகள் வேறு இருக்கிறது.

அப்படித் தீர்த்துக் கொண்டவர்கள் மிகவும் நல்லவர்கள். எங்கே விவசாயச் சங்கம் இருக்கிறதோ, எங்கே விவசாயிகள் கட்டுப்பாடாக, சட்டத்திலே கொடுக்கப்பட்டுள்ள உரிமையைப் பாதுகாப்பதற்காக நடவடிக்கைகள் எடுத்துக் கொள்கிறார்களோ அவர்கள் எல்லாம் பொல்லாதவர்கள். அதற்கு சட்டம் என் இயற்றப்பட வேண்டும் ? சட்டமே தேவை இல்லையே ? என் கட்சியில் இருந்து கொண்டு, அந்த ஒரு இயக்கத்தை வைத்துக் கொண்டு சுமுகமான முறையிலே செல்லாமல் ஏதோ கலாட்டா செய்வதாக அமைச்சர் அவர்கள் ரொம்பவும் கவலைப்படு கிறார்கள். சுமுகம் குறைந்ததற்கு காரணம், இந்த விவசாயிகள், குடி யானவர்கள், அதுவும் முக்கியமாக எதிர்க்கட்சிகள் என்று சொல்லப்படு கிறது. அதிலும் எதிர் கட்சியிலே உள்ளவர்கள் நன்றி கெட்டவர்கள் என்னும் முறையிலே கருத்தைத் தெரிவித்திருக்கிறார்கள். அதிலே எதிர்க்கட்சியிலே உள்ள இந்தக் கல்யாணசுந்தரத்தையும் சேர்த்து நன்றி கெட்டவர்கள் என்று சொல்லுகிறார். அது பற்றி நான் கவலைப் படவில்லை. அரசாங்கம் எந்தக்காரியத்தையும் நன்றி காட்டுவார்கள், காட்ட வேண்டுமென்று கருதி செய்யக் கூடாது. அதற்கெல்லாம் அப்பாற்பட்ட ஒரு கொள்கையை வைத்து எந்தக் காரியத்திற்கும் செய்ய வேண்டும். அமைச்சர் அவர்கள் இதையெல்லாம் ஏதோ குறையாகச் சொல்கிறாரே தவிர, இந்த யோசனைகள் எல்லாம் எங்கள் கட்சியைச் சார்ந்த யோசனை களே அல்ல. திட்டக் கமிஷனில் கூறியவைகளைத்தான், அந்த யோசனை களைத்தான் எடுத்துச் சொல்கிறோம். அந்த முறையிலே பேசுகிறோமே தவிர, ஏதோ விவசாய சங்கத்தின் சார்பாகவோ அல்லது கம்யூனிஸ்ட்கட்சியின் சார்பிலோ நான் பேசவில்லை. நான் கம்யூனிஸ்ட் கட்சியைச் சார்ந்தவன். இருந்தாலும், திட்டக் கமிஷன் கூறிய பிரச்னைகளை யெல்லாம் இங்கே வைத்து, அதற்குப் புறம்பாக ஏதாவது பேசி இருக்கிறேனா என்பதை ஒரு கமிட்டி நியமித்து வேண்டுமானால் விசாரிக்கட்டும். நான் வேண்டு மானாலும் அந்த கமிட்டியில் இல்லை. மற்றக் கட்சித் தலைவர்களை வைத்து ஒரு கமிட்டி அமைத்து விசாரித்து, நானோ அல்லது என் கட்சியைச் சேர்ந்த அங்கத்தினர்களோ அல்லது இதிலே ஈடுபட்டிருக்கக்கூடிய விவசாய சங்கமோ சட்டத்திற்கு அல்லது அரசாங்கத்தின் நோக்கத்திற்கு அல்லது திட்டக் கமிஷனின் யோசனைக்கு குந்தகமான முறையிலே எங்காவது சொல்லப்பட்டிருக்கிறதா என்பதை பரிசீலனை செய்யட்டும். அப்படி இல்லாமல் போகிற போக்கிலே, அதுவும் வயதிலே பெரியவர் என்ற காரணத்திற்காக நாங்கள் கொஞ்சம் மதிப்புக் கொடுக்கிறோம் என்பதற்காக ஏதாவது பேசுவது சரியல்ல என்பது என்னுடைய அபிப் பிராயம். விளையாட்டாகப் பேசி இருந்தாலும், இப்படி ஒரு கட்சியைப் பற்றிப் பேசுவது சரியல்ல என்பதை அவருடைய கவனத்திற்கு கொண்டு வர விரும்புகிறேன். விஷயத்தைப் புரிந்துகொண்டு, அல்லது அதை ஆழமான முறையிலே பரிசீலனை செய்து பார்த்து விட்டுப் பேசினாலும் பரவாயில்லை. அதை விட்டுவிட்டு அவர் சொந்த அபிப்பிராயத்தையோ அல்லது வேறு யாரோ சொல்கின்றதையோ வைத்துப் பேசுவது சரியல்ல. இப்படிக் குறை கூறும் போது, நான் எந்த அதிகாரிகளையும் குறை கூறவில்லை. சட்டத்திலே உள்ள குறைகளையும், அதைச் செய்கின்ற இந்த அரசாங்கத்தையும்தான் குறை கூறுகிறேன். குறிப்பாக இந்தச் சட்டத் திலே ரெவின்யூ டிவிஷனல் ஆபீசர்களுக்கு இதிலே போதிய அனுபவம் இல்லை. அதோடு அந்த அதிகாரிகளுக்கு அதிகமான அதிகாரத்தையும் வழங்கவில்லை. இந்தச் சட்டத்தின் நோக்கத்தையும், அதன் விளக்கங்களை யும் அவர்களுக்கு நல்ல முறையிலே விளங்க வைக்கவில்லை. இதெல்லாம் இந்த அரசாங்கத்தின் குறையே தவிர, ரெவின்யூ டிவிஷனல் ஆபிசர் களின் குறைபாடு அல்ல. ஆகவே இதை பயன் படுத்தி ரெவின்யூ டிவிஷனல் ஆபீசர்கள் தீர்ப்புக் கொடுத்துள்ளதை எடுத்துக் கொள்வது முறையல்ல. ஒவ்வொரு வருஷமும் இந்தச் சபையிலே சில கஷ்டங்கள் இதிலே இருப்பதை எனக்குச் சந்தர்ப்பம் கிடைக்கும் போதெல்லாம் எடுத்துக் காட்டி வந்திருக்கிறேன். நங்கவரம் பண்ணையைப் பற்றியும், அதைப் போன்று இன்னும் பல விஷயங்களைப் பற்றியும் நான் தஸ்தா வேஜியின் அடிப்படையிலேயே எடுத்துக் காட்டியிருக்கிறேன். இந்தச் சபையில் தான் எந்த மசோதாவைக் கொண்டு வந்தாலும், அது தோற்கடிக்கப்

படும் என்பதை நான் நன்கு அறிவேன். ஆளும் கட்சியினர் கொண்டு வந்த மசோதாவையே, வாபஸ் பெற்றுக் கொண்டு, நிலச்சுவான்தார் களின் விருப்பத்திற்கிணங்க அவர்களின் யோசனைகளை ஏற்றுக்கொண்டு, அந்த முறையில் சீர்திருத்தப்பட்டு மசோதா வந்திருக்கும்போது, நான் ஒரு மசோதாவைக் கொண்டு வந்தால் என்ன ஆகும் என்பது எனக்குத் தெரியும். இருந்தாலும், இந்தச் சட்டத்திலே உள்ள குறைபாடுகளையெல் லாம் எனக்கு சந்தர்ப்பம் கிடைக்கும்போது எடுத்துக் காண்பித்தும், திருத்தங்கள் கொடுத்தும் வந்திருக்கிறேன். இது வரையிலே இந்தச் சட்டத் தால் என்ன நன்மைகள் ஏற்பட்டு இருக்கின்றன. என்ன பாதகங்கள் ஏற்பட்டு இருக்கின்றன என்பவைகளை மதிப்பிடுவதற்காக ஒரு கமிட்டியை நியமிக்கக்கூட அதிகாரம் இல்லையா? நான் சொல்லும் குறைகளையே வேண்டுமானால் எடுத்துக் கொள்ள வேண்டாம். அது ஒரு பக்கம் இருக் கட்டும். குறைகள் இருக்கின்றன என்று பொதுவாகச் சொல்லப்படுகிறதே, அது என்ன குறைகள் என்று கூடவா விசாரணை செய்யக்கூடாது.

DEPUTY SPEAKER : **I think the hon. Member need not go into those details now.**

SRI M. KALYANASUNDARAM : அமைச்சர் அவர்கள் இதைப் பற்றி பரிசீலனை செய்வதாகச் சொல்லியிருந்தால், நான் இப்போது பேச வேண்டிய அவசியமே ஏற்பட்டிருக்காது. புறம்பாக உள்ளது என்று சொல்கிறார்களே, அது என்னவென்று கூடவா பரிசீலனை செய்யக்கூடாது, அதிலே என்ன கஷ்டம்? வேண்டுமானால் அதிகாரிகளையே நியமித்து ஒரு உயர்தர கமிட்டியை நியமித்து அவர்கள் பரிசீலனை செய்த பிறகு அமுல் நடத்தட்டும், ஆட்சேபனை இல்லை. ஆகவே குறைபாடுகளை நிவர்த்தி செய்ய விசாரணை அவசியம். காரணம், ஏற்கனவே பல தீர்ப்புகள் ஹைகோர்ட்டிலே இருக்கிறது. ஆகவே ஆர் டி. ஒக்கள் வழங்கியுள்ள தீர்ப்புகளை வரவழைத்து பரிசீலனை செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொண்டு, இந்தச் சட்டத்திலே 2 வருஷம் என்று இருப்பதை ஆட்சேபிக் காமல், ஆதரிக்கிறேன் என்று கூறிக்கொண்டு என் பேச்சை முடித்துக் கொள்கிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU : நான் சொல்லவேண்டி யதை முன்பே சொல்லிவிட்டேன். ஆனால் அவருக்கு பேச வேண்டிய சந்தர்ப்பம் வந்ததாலே, அவர் இப்படிப் பேசுகிறார். நான் சொன்னது அவரை உறுத்திற்று. ஆகவே இப்படிப் பேசினார். சிலர் கலவரம் ஏற்படக் கூடிய சூழ்நிலையை உண்டாக்குகிறார்கள் அதாவது ஒரு பகுதியினர் என்று தான் நான் குறிப்பிட்டேன். ஆனால் அது தன் பகுதி தான் என்று ஒத்துக்கொள்ளக்கூடிய வகையில் இவ்வளவு கோபமாகவும், அவசரமாக வும் பேசுகிறார். யார் செய்தாலும், இப்போது 3 சட்டங்கள் செய்த பின்னர் இந்தக் குழப்பங்கள் எல்லாம் அடங்கி, சுமுகமாக நடந்து வருகிறது. இந்த மசோதாவைப் பற்றிய மட்டில் இனிமேல் எந்த விஷயத் தையும் விவாதிக்க வேண்டியதில்லை. நடக்க வேண்டிய அடிப்படையில் தான் கொடுக்கப்பட்டு இருக்கிறது. முதலிலே ஏற்பட்ட குறைபாடுகளை யெல்லாம் இப்போது போக்கப்பட்டுள்ளது. அப்படி வரக்கூடிய காலத் திலே எந்த விதமான குறைகள் ஏற்பட்டாலும், அதைப் போக்குவதற்கும் தெரியும். இதற்காக பின்னால் இரண்டு நாள் விவாதிக்கப்பட இருக் கிறது. அப்போது அவர்கள் கருத்தைத் தெரிவித்தால் அதற்கும் விடை யளிக்கத் தெரியும். ஆகவே இந்த மசோதா இப்படியே இருக்கலாம்.

DEPUTY SPEAKER : The question is—

"That the Madras Cultivating Tenants Protection (Amendment) Bill, 1961, be passed."

The motion was put and carried and the Bill was passed.